"அப்பச்சிமார் காவியம்" என்னும் இந்நூல், 'குருகுலத்தார்' 'வாளரச மணவாளர்' என்று சிறப்பிக்கப்பெறும் வேட்டுவர் சமுதாயப் பெருமை கூறும் ஒப்பற்ற அரிய நூல்.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வானுறையும் தெய்வமாக வணங்கப்பெறும் அப்பச்சிமாரய்யனின் ஆட்சித்திறம், பக்தி, கொடை, வீரம், தெய்வீகத் தன்மை இவைகளை விரிவாக விளக்குகிறது.

இன்று வேட்டுவர் சமுதாயம் மட்டும் அல்ல, கொங்கு வேளாளர் பெருமக்களும் பெருவாரியாக அப்பச்சிமாரய்யனை வணங்கும் சமுதாய ஒற்றுமைக்குக் கால்கோள் நாட்டுவதுபோல், பயிரன், சாத்தந்தைகுலக் கொங்கு வேளாண் பெருமக்கள் அப்பச்சிமாரய்யன் அவைக்களத்தில் வீற்றிருந்த பெருமை இந்நூலில் கூறப்படுகிறது. சாத்தந்தை குலத்தார் மனைவி ஆண்டாயி மிக முக்கியமான குடும்பப் பெண்ணாக இடம் பெறுகிறார்.

கொங்கு 24 நாடுகட்கும் காணி உரிமையுடைய வேட்டுவர் சமுதாயக் குலங்கள் எவை எவை என்று கூறுவதுடன் 153 வேட்டுவர் சமூகக் குலங்களின் பட்டியலையும் இந்நூல் தருகிறது.

அப்பிச்சிமார் என்று கூறும் வழக்கம் இருப்பினும் ஏட்டுச் சுவடியில் 'அப்பச்சிமார் காவியம்' என்றே எழுதப்பட்டுள்ளது.

தக்கை இசையில் பாடும் வண்ணம் இந்நூல் இயற்றப்பட்டதாகக் கூறப்படுகிறது. இந்நூல் படிக்கப்பட்டுள்ளது, பாடப்பட்டுள்ளது. படிக்கும் முறை விளக்கமாகக் கூறப்படுவதால் இந்நூலின் புனிதத் தன்மை தெரிகிறது.

வேட்டுவர் சமுதாயத்திற்குப் 'புலிக்கொடி' உரிமை உடையதாகக் கூறப்படுகிறது. வாகை மாலையும் கூறப்படுகிறது.

தமிழில் பாடப்பட்ட காவியங்கள் சிறந்தவற்றுள் ஒன்றாக இந்நூல் திகழுகிறது.

## முன்னுரை

ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவராய், வீரமும், தீரமும், ஈரமும் மிக்க உயர்பண்பாளராய், மனிதருள் மாமணியாய்த் தோன்றி வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வானுறையும் தெய்வமாகப் போற்றி வழிபாடும் வணக்கமும் பெற்றுத் திகழும் கண்கண்ட தெய்வம் அப்பச்சிமாரய்யன்.

அவரது அருள் வரலாற்றை 354 செந்தமிழ்க் கவிதைகளால் ஒரு 'வீரகாப்பியம்' என்று புகழத் தக்க வகையில் கவிஞர் கவி நயம்பட விளக்கிப் பாடியுள்ளார். தமிழின் தலை சிறந்த 'போர்க்காப்பியம்' என்று புகழ்பெறத் தக்க வகையில் நூல் கவிதைச் சுவையுடன் மிளிர்கிறது. பிற்காலத் தமிழில் இந்நூல் போல் சிறப்புடைய நூல் எந்நூலும் இல்லை எனத் துணிந்து கூறலாம்.

சிறப்புமிகு இந்நூலை இயற்றிச் செந்தமிழ் அன்னைக்கு அணிகலனாய்ப் பாடிய புலவர் பற்றி எந்தக் குறிப்பும் இல்லை. எனினும் முத்தமிழை ஐயம் திரிபறக்கற்று தமிழ் சமய, புராண, இலக்கியங்கள் அனைத்தையும் எழுத்தெண்ணிப் படித்தவர் என்பது பல இடங்களில் நயமுள்ள கவிதைகளால் நன்கு புலப்படுகிறது.

தக்க இடத்தில் ஏற்ற உவமைகளைக் கையாளுவதில் இவருக்கு நிகரான புலவர் தமிழில் எவரும் இல்லை என்று துணிந்து கூறலாம்.

கொங்கு 24 நாடுகளில் வளம் மிக்கது வாழவந்தி நாடு. இருபது தொன்மையான ஊர்களையுடைய வாழவந்தி நாட்டில் அழகிய ஒரு நகரம் பிள்ளைக்கரையாற்றூர். ஊர்த்தொகைப்பாடல் 'ஆகமம் தெரி பிள்ளைக்கரையாறு" என்று அவ்வூரைப்புகழுகிறது.

அச்சிறப்புமிகு பேரூரில் கொங்கு மண்டலத்தின் பூர்வகுடிகள் என்னும் பெருமைக்கு ஏற்பச் சிறந்து வாழும் வேட்டுவர் சமூகத்தில் உசரகுல வேட்டுவர் குடும்பத்தில் பெரியமாரய்யன் திரு அவதாரம் செய்தார்.

நாட்டு நலம்பேணி நல்லாட்சி நடத்திய பெரிய மாரய்யனுக்கு நான்கு தம்பிமார்கள். அவர்கள் சின்ன மாரய்யன், பிள்ளைமாரய்யன், உத்தண்டராயன், ஆவுடையான் ஆகியோர் ஆவர்.

பெரிய மாரய்யனின் அத்தாணி அரச மண்டபத்தில் நான்கு தம்பியரும் இடம் பெற்றிருந்தனர். மற்றும் அமைச்சர் கற்பகத்தான், பட்டாலிகுல இராக்கியண்ணன், மசரி மக்களான தனுக்காமன், பாதருகார், அரசர்மக்கள் இருவர். சிங்கக் கவிவாணன் ஆகியோர் இருந்தனர். மற்றும் கொங்கு வேளாளர் சமுதாயம் பயிரகுலம் சார்ந்த நல்லசாமன், சாத்தந்தை குலம் சார்ந்த சிவகுருநாதன் மகன் அர்த்தநாரியும் அவர் மனைவி மெய்யாண்டாயி ஆகியோரும் இருந்தனர்.

பெரிய மாரய்யன் உள்ளிட்ட ஐந்து சகோதரர்கட்கும் மொத்தம் 70 ஆண்மக்கள் பிறந்தனர். அவர்கள் அனைவர் பெயரும் நூலில் இடம்பெற்றுள்ளன.

**பெரியமாரய்யன் மக்கள் 16 பேர்:**

(1) பழனியப்பன் (2) சங்கரன் (3) சிதம்பரன் (4) வேலாயுதன் (5) முருகன் (6) ஆறுமுகன் (7) நீலகண்டன் (8) நாதனன் (9) கடம்பணன் (10) செங்கோடு (11) அத்தனாரி (12) நாகப்பன் (13) முத்தணன் (14) மயிலப்பன் (15) பொன்னய்யன் (16) கண்ணப்பன்

**சின்னமாரய்யன் மக்கள் 12 பேர்:**

(1) ராமணன் (2) லட்சுமணன் (3) சுந்தரன் (4) சந்திரன் (5) பெரியணன் (6) செங்கோடன் (7) லிங்கய்யன் (8) அத்தனாரி (9) சுப்பிரமணியன் (10) பனையன் (11) அண்ணாமலையப்பன் (12) தேவணன்

**பின்னைமாரய்யன் மக்கள் 15 பேர்:**

(1) அகிலாண்டன் (2) குமரவேலன் (3) கந்தப்பன் (4) அத்தனாரி (5) செங்கோடன் (6) மாரப்பன் (7) ராசணன் (8) மலையணன் (9) சிவலிங்கன் (10) சுவாமியணன் (11) சுப்பணன் (12) சடையன் (13) சதாசிவன் (14) பெருமாள் (15) விமலன்

**உத்தண்டராயன் மக்கள் 14 பேர்:**

(1) உமாபதி (2) கங்காளன் (3) முத்தையன் (4) செவ்வந்தி (5) மலைக்கொழுந்து (6) சிவக்கொழுந்து (7) கண்ணன் (8) பசுபதி (9) செங்கோடன் (10) அத்தனாரி (11) பரமன் (12) சண்முகன் (13) நம்பன் (14) நாதன்

ஆவுடையான் மக்கள் 13 பேர் :

(1) ஈசுவரன் (2) செங்கோடு (3) அத்தனாரி (4) இரத்தினம் (5) கயிலாயன் (6) மயேசுவரன் (7) கண்ணப்பன் (8) காளத்திரி (9) நாதன் (10) நாகமலை (11) குருநாதன் (12) அண்ணாமலைராயன் (13) நன்னா உடையான்

இவர்களில் பெரிய மாரய்யனின் மூத்த மகன் பழனியப்பனுக்குக் கீரம்பூர் காட்டுவேட்டுவரில் நாகமலையின் அண்ணன் பொன்னய்யனின் மூத்தமகள் செல்வி காளியை மணம்பேசி முடித்தனர்.

பெரிய மாரய்யனின் மூத்த சகோதரியார் நாகவல்லி கீரம்பூர் சென்று திருமண ஏற்பாடுகள் குறித்துப் பேசினார். திருமணச் செய்தி வேட்டைக்குச் சென்றிருந்த எழுபது மக்களுக்கும் தெரிவிக்கப்பட்டது. தம்பியர் அனைவரும் பழனியப்பனை இல்லம் செல்ல வேண்ட பழனியப்பன் மறுத்து விடுகிறார்.

எழுபது சகோதரர்களும் கூடி எல்லாரும் ஒன்றாகத் திருமணம் செய்வதன்றித் தனித்தனியே மணம் செய்து கொள்வதில்லை என்று சபதம் செய்தனர். வீடு திரும்பிய மக்கள் 70 பேரும் பெற்றோரிடம் தங்கள் முடிவினைக் கூறவே அவர்களும் ஏற்றுக்கொண்டு 70 மணமகள்கள் எங்குள்ளனர் என்று தேடினர்.

பூந்துறை நாட்டு ஓடப்பள்ளி என்னும் ஊரில் வேட்டுவர் சமூகத்தினர் பெருவாரியாகவும், உயர்ந்த நிலையிலும் வாழ்வதாகக் கேள்விப்பட்டனர். அவர்கள் இல்லத்தில் திருமண வயதுடைய எழுபது பெண்மக்கள் இருப்பதையும் அறிந்தனர்.

பிள்ளை மாரய்யன், சிங்கக் கவிராசன், ஆண்டாயி மூவரும் பெண்கேட்கச் சென்றனர். பெண் வீட்டார் சம்மதத்தை மகிழ்ச்சியுடன் தெரிவித்தனர். சிங்கக்கவிராசன் பெண்களின் பெற்றோர் குலம் பற்றிக் கேட்டார். கீழ்க்கண்டவாறு கூறப்பட்டது.

**எழுபது மக்களுக்கும் பெண்கொடுத்த ஓடப்பள்ளி வேட்டுவர் சமுதாயத்தினர் ஏழுபேர் :**

(1) வேந்த வேட்டுவர் (2) அரிச்சந்திர வேட்டுவர் (3) காட்டு வேட்டுவர் (4) புன்னாடி வேட்டுவர் (5) மணிய வேட்டுவர் (6) பொன்ன வேட்டுவர் (7) புல்ல வேட்டுவர்

ஏழு குலம் சார்ந்த 11 பேர் :

(1) வேந்தகுலம் அவினாசியின் பெண்மக்கள் 7 பேர்

(2) வேந்தகுலம் குருநாதனின் பெண்மக்கள் 9 பேர்

(3) அரிச்சந்திரகுலம் சிங்கப்பெருமாளின் பெண்கள் 10 பேர்

(4) அரிச்சந்திரகுலம் தவசியப்பனின் பெண்கள் 7 பேர்

(5) காட்டுக்குலம் குஞ்சரநாதனின் பெண்கள் 6 பேர்

(6) காட்டுக்குலம் தருமனின் பெண்கள் 8 பேர்

(7) புன்னாடிகுலம் சுந்தரநாதனின் பெண்கள் 5 பேர்

(8) புன்னாடிகுலம் அத்தனாரியின் பெண்கள் 8 பேர்

(9) மணியகுலம் செங்கோடனின் பெண்கள் 5 பேர்

(10) பொன்னகுலம் தீர்த்தகிரியின் பெண்கள் 3 பேர்

(11) புல்லகுலம் சந்திரனின் பெண்கள் 2 பேர்

உசரகுலத்தைச் சேர்ந்து 70 மக்களுக்கும் மேற்கண்ட எழுபது பெண்களில் யார் யார் பொருத்தமுடையவர்கள் என்று சோதிடன் கணித்துக் கூறுவது விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

கொங்கு 24 நாட்டுக்கும் உரிய வேட்டுவர் குலப் பெருமக்கள் அடுத்துக் கூறப்பட்டுள்ளனர். எல்லோருக்கும் திருமணத்தகவல் கூறப்பட்டது.

(1) பூந்துறை நாடு - வேந்த வேட்டுவர்

(2) வடகரைநாடு - கரடி வேட்டுவர்

(3) காஞ்சிக் கோயில் நாடு - வேம்ப வேட்டுவர்

(4) ஒடுவங்க நாடு - இலங்கை வேட்டுவர்

(5) குறுப்புநாடு - உரிமைப்படை வேட்டுவர்

(6) ஆறுநாடு - அரிச்சந்திர வேட்டுவர்

(7) பொன்குலுக்கிநாடு - தணம்ப வேட்டுவர்

(8) மணநாடு - வெங்கச்சி வேட்டுவர்

(9) காவடிக்கா நாடு - மணிய வேட்டுவர்

(10) வாரக்கநாடு - மோக்காளி வேட்டுவர்

(11) அண்ட நாடு – சுண்டை வேட்டுவர்

(12) வைகாவூர் நாடு – வாகை வேட்டுவர்

(13) நல்லுருக்கா நாடு – புல்ல வேட்டுவர்

(14) தென்கரை நாடு – புன்னாடி வேட்டுவர்

(15) தட்டய நாடு – பட்டாலி வேட்டுவர்

(16) தலைய நாடு – சதுகால வேட்டுவர்

(17) சேலநாடு – சேர வேட்டுவர்

(18) காங்கய நாடு – சாந்தப்படை வேட்டுவர்

(19) வெங்கல நாடு – மீன வேட்டுவர்

(20) கிழங்கு நாடு – கிழங்க வேட்டுவர்

(21) நரைய நாடு – காட்டு வேட்டுவர்

(22) அரையநாடு – கரைய வேட்டுவர்

(23) பூவாணிநாடு – பூவாணி வேட்டுவர்

(24) எழுகரை நாடு – உசர வேட்டுவர்

கொங்கு 24 நாட்டிலும் உள்ள குருகுலத்தவர் அனைவரும் எழுபது மக்களுக்கும் நடைபெறும் திருமண மடல் எழுதப்படுகிறது. இந்த இடத்தில் வேட்டுவர் குலங்கள் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. அவை வருமாறு :

(1) வேந்த வேட்டுவர் (2) மீன வேட்டுவர் (3) உசரவேட்டுவர் (4) சேந்த வேட்டுவர் (5) கிழங்க வேட்டுவர் (6) செம்ப வேட்டுவர் (7) சாந்தப்படை வேட்டுவர் (8) புன்னாடி வேட்டுவர் (9) மளம்பவேட்டுவர் (10) மாந்தப்படை வேட்டுவர் (11) மோக்காளி வேட்டுவர் (12) வாகை வேட்டுவர் (13) மின்ன வேட்டுவர் (14) கரைய வேட்டுவர் (15) வேம்பவேட்டுவர் (16) பொன்ன வேட்டுவர் (17) பதரவேட்டுவர் (18) பூத வேட்டுவர் (19) காட்டு வேட்டுவர் (20) அரிச்சந்திர வேட்டுவர் (21) வன்னி வேட்டுவர் (22) கொடும்ப வேட்டுவர் (23) மந்திரி வேட்டுவர் (24) பரட்டை வேட்டுவர் (25) சலங்கை வேட்டுவர் (26) பண்ணை வேட்டுவர் (27) சுறட்டை வேட்டுவர் (28) பட்டாலி வேட்டுவர் (29) தும்பை வேட்டுவர் (30) தொரட்டி வேட்டுவர் (31) மணிய வேட்டுவர் (32) சுண்டை வேட்டுவர் (33) கொல்லி வேட்டுவர் (34) பாண்டி வேட்டுவர்




Scanned with OKEN Scanner

(35) குருகுல வேட்டுவர் (36) வில்லி வேட்டுவர் (37) வேங்கை வேட்டுவர் (38) இலங்கை வேட்டுவர் (39) கல்ல வேட்டுவர் (40) கட்டாரி வேட்டுவர் (41) காடை வேட்டுவர் (42) வில்ல வேட்டுவர் (43) தூங்க வேட்டுவர் (44) புல்ல வேட்டுவர் (45) செய்ய வேட்டுவர் (46) வேதாரி வேட்டுவர் (47) கற்பூர வேட்டுவர் (48) பைய்ய வேட்டுவர் (49) பனைய வேட்டுவர் (50) பறவை வேட்டுவர் (51) தொய்ய வேட்டுவர் (52) சேதாரி வேட்டுவர் (53) தூரை வேட்டுவர் (54) மொய்ய வேட்டுவர் (55) சரக்கு வேட்டுவர் (56) மோளை வேட்டுவர் (57) கரும்புனித வேட்டுவர் (58) பரிப்படை வேட்டுவர் (59) கரிப்படை வேட்டுவர் (60) உரிமைப்படை வேட்டுவர் (61) கொழுகத்தாழி வேட்டுவர் (62) சிறுத்தலை வேட்டுவர் (63) நாத வேட்டுவர் (64) பிச்ச வேட்டுவர் (65) நரம்ப வேட்டுவர் (66) வெள்ளை வேட்டுவர் (67) கதிப்ப வேட்டுவர் (68) மயில வேட்டுவர் (69) பள்ள வேட்டுவர் (70) குளுவ வேட்டுவர் (71) பத்திர வேட்டுவர் (72) கொன்னை வேட்டுவர் (73) விதரி வேட்டுவர் (74) குறங்க வேட்டுவர் (75) கள்ளை வேட்டுவர் (76) குன்னாடி வேட்டுவர் (77) களிப்ப வேட்டுவர் (78) கருங்கண் வேட்டுவர் (79) கொடும்புலி வேட்டுவர் (80)கரந்தை வேட்டுவர் (81) பம்பை வேட்டுவர் (82) கூரம்ப வேட்டுவர் (83) செங்கண்ண வேட்டுவர் (84) சர்க்கரை வேட்டுவர் (85) பேரீஞ்ச வேட்டுவர் (86) இந்திர வேட்டுவர் (87) கோமாரி வேட்டுவர் (88) பொன்னுளிய வேட்டுவர் (89) ஆறுமுக வேட்டுவர் (90) மலைய வேட்டுவர் (91) பருத்தி வேட்டுவர் (92) கரடி வேட்டுவர் (93) முக்கொன்றை வேட்டுவர் (94) மாடந்தை வேட்டுவர் (95) கௌதாரி வேட்டுவர் (96) பால வேட்டுவர் (97) பூச்சந்தி வேட்டுவர் (98) கூச்சந்தி வேட்டுவர் (99) நற்சுழி வேட்டுவர் (100) பூவாணி வேட்டுவர் (101) பெயர வேட்டுவர் (102) நாரி வேட்டுவர் (103) கடம்ப வேட்டுவர் (104) நரிய வேட்டுவர் (105) வீரவேட்டுவர் (106) பலகை வேட்டுவர் (107) சொட்டை வேட்டுவர் (108) காரை வேட்டுவர் (109) தூண்டி வேட்டுவர் (110) கலக்க வேட்டுவர் (111) காரிவேட்டுவர் (112) பிரம்ப வேட்டுவர் (113) கவுண்டி வேட்டுவர் (114) பூழை வேட்டுவர் (115) கோமுக வேட்டுவர் (116) புட்ப வேட்டுவர் (117) ஊழை வேட்டுவர் (118) பூலுவ வேட்டுவர் (119) உம்பி வேட்டுவர் (120) காழைய வேட்டுவர் (121) மும்முடி வேட்டுவர் (122) குரும்ப வேட்டுவர்

(123) மாழை வேட்டுவர் (124) வெங்கச்சி வேட்டுவர் (125) கதுகால வேட்டுவர் (126) ஆமை வேட்டுவர் (127) கோதண்ட வேட்டுவர் (128) மாந்தை வேட்டுவர் (129) மாச்சாடி வேட்டுவர் (130) சர்க்காரி வேட்டுவர் (131) திட்ட வேட்டுவர் (132) பாலை வேட்டுவர் (133) பெருந்தலை வேட்டுவர் (134) சிலை வேட்டுவர் (135) நக்க வேட்டுவர் (136) கீரந்தை வேட்டுவர் (137) நாரை வேட்டுவர் (138) துர்க்கை வேட்டுவர் (139) மினுக்க வேட்டுவர் (140) சுள்ளி வேட்டுவர் (141) கோமாளி வேட்டுவர் (142) கரடி வேட்டுவர் (143) ஆனந்த வேட்டுவர் (144) உத்திர வேட்டுவர் (145) வேங்கை வேட்டுவர் (146) முழக்க வேட்டுவர் (147) அமர வேட்டுவர் (148) மோகி வேட்டுவர் (149) அந்துவ வேட்டுவர் (150) வெளிராசி வேட்டுவர் (151) நட்சத்திர வேட்டுவர் (152) அக்கினி வேட்டுவர் (153) வான்மீக வேட்டுவர்

சோதிடர்கள் எழுபது மணமகளுக்கும் எந்தெந்த மணமகன் பொருத்தமாக உள்ளனர் என்று அறிவித்தனர். திருமணத்திற்குப் பெண் கேட்க வந்தவர்கள் மூவரும் ஊர் சென்று பெண் வீட்டார் திருமணத்திற்கு ஒப்புக் கொண்ட விபரம் கூறினர்.

ஒரு நல்ல நாளில் திருமணத்தின் பொருட்டு பெரியமாரய்யன் குடும்பத்தினர் அனைவரும் எழுபது மணமக்களுடன் பெண் வீட்டுக்கு வந்தனர். சிறப்பாக வரவேற்பு அளித்தனர். சோதிடர் குறிப்பிட்ட நாள் திருமண ஏற்பாடுகள் தொடங்கி நடந்தன. முகூர்த்த வேளையில் திருமணமும் முடிந்தது.

அப்போது ஒரு தூதன் ஓலையுடன் கண்ணீரும் கம்பலையுமாக உடலில் போர்க்காயங்களுடன் அழுது கொண்டு பெரிய மாரய்யனிடம் அடைக்கலம் புகுந்தான். விபரம் கேட்க கீழ்க்கண்ட விபரம் கூறினான்.

தாரமங்கலம் கைலாசநாதர் அருள் பெற்ற பூவாணிய நாட்டில் ஆவணி வேலூரில் பூவாணி வேட்டுவர் குலத் தலைவன் அரசாட்சி செய்தான். அவன் பெயர் போத்திராசன்.

பூவாணி வேட்டுவர் தலைவன் போத்திராசனுக்கும் பூந்துறை நாட்டு வேட்டுவர்கட்கும் போர் மூண்டு ஆலத்தூரில் போர் நடைபெற்றது. அதில் பூந்துறை நாட்டார்க்குப் பேரழிவு ஏற்பட்டது. பூந்துறை நாட்டார் பெரியமாரய்யன் உதவிகேட்டே தூதனிடம் ஓலை அனுப்பினர். பெரிய மாரய்யன் போர் பற்றிய எல்லா விபரங்களையும் கேட்டறிந்தார்.

பூந்துறை நாட்டார்க்கு ஆதரவாகப் பூவாணி நாட்டுப் போத்திராசன் மீது போர் செய்ய உடனடியாகப் பெரிய மாரய்யன் தன் படையோடு புறப்பட்டார். அவரைச் சார்ந்த எல்லோரும் படையுடன் புறப்பட்டனர். திருமணம் முடிந்த எழுபது மணமக்களும் படையுடன் போருக்குப் புறப்பட்டனர்.

போர் நிகழ்ச்சிகள் மிக விரிவாக உணர்ச்சி மிக்க பல பாடல்களில் வருணிக்கப்படுகிறது. சந்தப் பாடல்கள் போர்க் காட்சியை நம் கண்முன்னே காட்டுகின்றன.

கடுமையான போரில் இரு தரப்பிலும் பலத்த ஆட்சேதம். போத்திராசன் கொல்லப்படுகிறான். ஆனால் பெரியமாரய்யன் உட்பட அனைவரும் வீர மரணம் அடைகின்றனர். எழுபது மணமகன்களும் உயிர்துறக்கின்றனர்.

மசரி தன் மக்கள் தனுக்காமன், பாதருகார் இருவரையும் தேடி வந்தவள் அவர்களும் வீரமரணம் அடைந்த செய்தி கேட்டுத் துயருற்றாள். விழுப்புண்பட்டு உயிர் பிரியாமல் இருக்கும் பெரிய மாரய்யனிடம் ஆசிபெற்று ஓடப்பள்ளி சென்று எல்லோரும் மடிந்த செய்தியைக் கூறுகிறாள். எழுபது மணமக்களும் தீப்பாய்ந்து வீரமரணம் அடைகின்றனர்.

துன்பியல் ஆக வரலாறு முடிந்தாலும் பெரிய மாரய்யனின் அருள், அன்பு, வீரம், பாசம் இவைகளை விளக்கி பக்திக் காவியமாகவும் திகழ்கிறது.

### திருச்செங்கோட்டுச் சிறப்பு

கொங்குநாட்டு தேவாரப்பாடல் பெற்ற ஏழு தலங்களில் ஒன்று திருச்செங்கோடு. கொடிமாடச் செங்குன்றூர் என்று சிறப்பிக்கப்படும் பேரூர். தேவி பார்வதி சிவபெருமான் உடம்பில் பாதி இடப்பாகம் பெற்று அர்த்தநாரீசுவர வடிவமாக எழுந்தருளிய இடம்.

அப்பச்சிமார் காவியத்தில் திருச்செங்கோடு தலமும் அர்த்தநாரீசுவரரும் மிகவும் சிறப்பிக்கப்படுகின்றனர். நூல் தொடக்கத்திலேயே

"வச்சிரமா நாககிரி அர்த்தநா ரீசர்எனும்
வஸ்துவே ஆதிமுதலே"

என்று பாராட்டி நூலுக்கு அருள்புரிக என்று ஆசிரியர் வேண்டுகிறார்.

பிள்ளைமாரையன், சிங்கக் கவிராசன், ஆண்டாயி மூவரும் முதலில் ஓடப்பள்ளிக்கு மணம் பேச வந்தபோது திருச்செங்கோட்டில் தங்கி

"நன்னயம் குறையாது இயங்கும்
நாகப் பொருப்புயர் தலத்தில்"

வணங்கி ஓடப்பள்ளி செல்கின்றனர். புறப்படும் பொழுது "அண்டர் நாயகன் செங்கோட்டில் அமர்ந்த தற்பரனை " நினைத்துப் புறப்பட்டனர் என்று கூறப்படுகிறது.

ஓடப்பள்ளியில் திருமணப்பேச்சு முடிந்து பெரிய மாரய்யனுக்குத் தகவல் சொல்லப் போகும் போதும் திருச்செங்கோட்டில் தங்கி வழிபடுகின்றனர்.

பெரிய மாரய்யன் உள்ளிட்ட அனைவரும் திருமணத்தின் பொருட்டு ஓடப்பள்ளி வரும்போது மீண்டும் திருச்செங்கோட்டில் தங்கி பல திருப்பணிகள் செய்ததுடன் பல்லாயிரக் கணக்கான பொன்குவியலைப் பலப்பல தர்மங்கட்கு வழங்கிய விபரம் மிக விரிவாகக் கூறப்படுகிறது.

பெரிய மாரய்யன் அம்பு பட்டு உயிர்பிரியும்முன் அர்த்தநாரீசர் காட்சி கொடுத்ததாகக் கூறப்படுகிறது.

"வெள்ளை விடையேற வெகுஅனந்தம்
விளங்க நீறுமெய் மேலணிந்து
பிள்ளை மதிச்சடை துலங்கிடவே
பெருமை செறிஅர்த்த நாரீசர்
உள்ளந்தனில் தெரிசனை கொடுத்து
உற்ற காட்சிதந்து அருட்கயிலை
வள்ளல் கரந்தபின் மாரேந்திரன் (323)
மாறாப் பேரின்ப மவுனமுற்றான்"

என்ற பாடலால் அந்நிகழ்ச்சி கூறப்படுகிறது.

எழுபது மணப்பெண்களும் தீப்பாயும் போதுகூட

"கோதை நகரீசன் தனைநினைந்து
விழுந்து கதியருள் குறுகினரால்"

என்று கூறப்படுகிறது.

பெரியமாரய்யன் உள்ளிட்ட சகோதரர்கள் ஐவர் வீட்டிலும் பிறந்த பையன்களுக்கு "செங்கோடன், அர்த்தநாரி" என்ற பெயர் தவறாமல் வைக்கப்பட்டுள்ளது.

சதாசிவ பண்டிதர் இயற்றிய "திருச்செங்கோட்டுத் திருப்பணி மாலை" நூலிலும் திருச்செங்கோட்டுக்கும் வேட்டுவர் சமுதாயத்திற்கும் உள்ள தொடர்பு கூறப்படுகிறது. திருச்செங்கோட்டில் சத்தியப்படியான அறுபதாம்படியில் உள்ள சுப்பிரமணியர் திரு உருவம் மோளக்கவுண்டம்பாளையம் காட்டுவேட்டுவர் சமூகத்திருப்பணியாகும்.

பரமத்திப் பாளையக்காரர் வேட்டுவர் சமூக அல்லாள இளையா நாயகன், அவர் மக்கள் ஆகியோர் செய்த திருச்செங்கோட்டுத் திருப்பணிகள் பல, நாகேசுவரர் சன்னதி முன் உள்ள ஸ்தூபி அவர்களால் செய்யப்பட்டது. மைசூர் நஞ்சையன் திருச்செங்கோட்டில் கொள்ளையிட்டபோது அவற்றை மீட்டுக் கொடுத்ததுடன் அதற்கு ஈடாகப் பல பொருள் கொடையளித்தவர்கள் அவர்கள்.

**கவித்திறன்**

பூவாணி நாட்டுப் போத்திராசன் செயல் பெரிய மாரய்யனுக்குக் கடும் கோபத்தை ஏற்படுத்துகிறது. மன்மதனை எரித்த சிவன்போல் கோபம் கொண்டாராம்.

"மீன மதனைக் கண்ணால் எரித்த
விமலன்எனக் கோபம் வெகுண்டு"

என்பன அதனை விளக்கும்.

இராமன் இராவணன்மேல் போரிட்டது போல் போத்திராசன்மேல் பெரியமாரய்யன் படையெடுத்துப் போரிட்டாராம்.

"அன்று தசரதன் மதலை மண்ணாள்
அரக்கர் மேலே நடந்ததுபோல்"

என்கிறார் கவிஞர்.

போத்திராசன் வீரர்கள் பெரியமாரய்யன் படைகண்டு கலங்கிய தன்மை கீழ்வரும் பாடலால் நயமான உவமைகளுடன் விளக்கப்படுகிறது.

'சிங்கம் தனைக்கண்ட உழுவையைப்போல்
தேயு தனைக்கண்ட ஈயதுபோல்
புயங்க மதனைக்கண்ட காகங்கள்போல்
புலவர் தமைக்கண்ட உலுத்தரைப்போல்
செங்கதி ரைக்கண்ட இருளதுபோல்
சிவிங்கி தனைக்கண்ட உளையதுபோல்
எங்கும் அடர்பொத்தி மன்னர்வீரர்
இதயம் கலங்கியே யவர்புலம்புவார்"

தலைவன் மறைந்தபின் எஞ்சிய வீரர்கள் தக்க தலைமையின்றித் தடுமாறிக் களம் புகுந்ததை,

"அரசர்க்கு எதிரான குடிபோலே
அறிவிலான் பெற்ற தமிழ்போலே
பரிசற் றிடும்விஞ்ச யரைப்போலே
பதுமச் சலமற்ற குளம்போலே
விரசிப் பொருதுங்க உயரகுல
வேந்தர் இறந்தபின் பவுஞ்சுடைந்து
சரசக் குணன்எங்கள் மாரேந்திரன்
தானை பவிஞ்சினுள் புகுந்ததுவே"

என்ற பாடலால் நயம்பட விளக்குகிறார்.

பெரிய மாரய்யன் படைவீரர்கள் போர்க்களத்தில் சுழன்று போரிட்டதை "குயவர்க்கு உயிராம் சக்கரம் எனச் சுற்றியே வருவார்" என்று கூறுகிறார்.

போத்திமன்னன் படையினரின் உடலும் தலையும் சிதைந்தது "கல்லினில் இட்ட பசுங்கலம்போல் கடகரியும் வதைத்ததுவே" என்கிறார்.

பெரியமாரய்யன் படை மிகப்பெரிய வலிமையுடன் போரிட்டது. போர் நடந்ததை நல்ல சந்தத்துடன் கூறி விடம் அருந்திய மீன்போல பகைவர் படை வாடியது என்கிறார்.

"குடலறுந்தது உடல்முறிந்தது குரலறுந்தது துரகதம்
மடல் பெயர்ந்தது புயமொடிந்தது வலியிழந்தனர் வீரர்கள்
கடகெலும்புகள் தெரிமுன்பொடு கரம்நெரிந்தது கடகரி
விடமருந்திய கயலெனும்படி மெலிவுகொண்டனர் யாவரும்"

என்பது அதைக் குறிக்கும் பாடலாகும்.

போத்திராசன் படைத்தலைவர்கள் "பெரிய மாரேந்திரன் நம் அனைவரையும் காலனுக்கு விருந்திடுவார். நாம் அனைவரும் இறப்போம்" என்று கூறியபோது போத்திராசன் மாரேந்திரன் கையால் இறப்பது புண்ணியம் என்கிறான்.

"வேலினுக்கும் முருகநெடு வில்லினுக்கும் பார்த்தன்எனும்
மாலினுக்கும் நிகரான மாரேந்திரன் நம்மையெல்லாம்
காலனுக்கும் கணங்களுக்கும் கடும்பேய்க்கும் குறளிகட்கும்
நாலுதிக்கும் விருந்திடுவான் நாங்கள்சொன்னோம் அறிதிர்"

"இனமும்ஒன்று விருதும்ஒன்று யானும்ஒன்று அவனும்ஒன்று
மனமும்ஒன்று ஆண்மைஒன்று மடிவதிந்த நாளும்ஒன்று
சனமும் ஒன்று மாரேந்திரன் கையம்பால் யாம்இறந்தால்
தனமதுள்ள காலம்மட்டும் தமக்கதுவே கீர்த்தி என்றான்"

என்பன அதைக் குறிக்கும் பாடல்கள்

## அப்பச்சிமார் காவியம்

### தக்கை இசையால் நூல்

மாட்டாத பேர்கள் மயேசுரரைக் கூறேன்வின்
நாட்டார் உரைத்தநெறி யாம்உணர்ந்து – கோட்டாலை
என்னத் திரிந்ததக்கை என்பார் இதைப்பெரியோர்
பன்னித் திரித்தலியல் பாம்.

### எல்லோரும் காவியம் கேளுங்கள்!

செப்பும் தமிழ்தேர்ந்து செய்யதக்கை சீரதனால்
'அப்பச்சி மார்கா வியம்' பாட – இப்புவியில்
நல்லோரும் பாவலரும் நாற்றிசையில் வாழுபவர்
எல்லோரும் கேளும் இனி.

### அர்த்தநாரீசர் அருள் புரிக !

பலர்மெய்க்க வளர்நிசி கதிர்கற்ப மெனல்எருக்கும்
பகீரதி என்புடன்
பாயரி மருப்பும்ஊ மத்தைக்கொப் பும்கொன்றைப்
பண்டங்கோடு அறுகுதும்பை

அலர்பத்ரம் இவையொக்க உடலில் புனைகோடு
அற்பரா வுக்கமீது
அருத்திராட்ச வட்டம் பகத்தவணை நட்டம்
அடற்பெற வடுக்கள்தோறும்

குலவிப்பிர பலமிக்க நவசசிப் பதியுற்ற
குமரற்கு இனியவித்தகா
குளவுற் றலைகொளற்ப மதலைச்சட லம்நிற்ப
குணநட் பருள்புரிகுவாய்

மலர்மட் டுலாவிய வருக்கைஇக் கும்கதலி
வனப்புயர்ந் திடுசோலைசூழ்
வச்சிரமா நாககிரி அர்த்தநா ரீசர்எனும்
வஸ்துவே ஆதிமுதலே !

## காவியம் படிக்கும் முறை

சீரு லாவிய குருகுலத்தில்
செனித்த மாரய்யன் காவியத்தைப்
பாரு ளோர்கேட்கும் தினத்தினில்
படியை மெழுகிஇக் கறையைவைத்து
தாரு லாமலர் சொரிந்துசெழும்
1 சுகநட் புறவுடன் தனிநிதியும்
பேரு லாவமுன்பு இலங்கநல்கி
பேணிச் சிறந்துஅர்ச் சனைசெய்து 4

மாசில் தூயதன் ணறைஅகிலின்
தூபம் இயற்றிமற் றுளபலரும்
ஆசை யுடன்ற நன்றியுடன் சுத்தமாய்
2 முறைவ ழாமல் பொழுதிருந்து
வாச மானசொல் தமிழ்வினவி
மகிழ்ந்து மாக்கதை வரித்தவர்க்கு
தூசும் கனகமும் வரிசைதர
துலங்க விளங்கவென்று உரைத்ததுவே 5

## வாழவந்தி நாட்டுச் சிறப்பு, வளம்

காடெல்லாம் கஞ்சச் சுரும்போசை
காவெல்லாம் கன்னிக் குயிலோசை
நாடெல்லாம் வேதத் தொனியோசை
நன்னெல் தலத்தில்சங்கு இனஓசை
கூடெல்லாம் பச்சைக் கிளியோசை
கோலவிழி மாதர்இளை ஞர்வைகும்
வீடெல்லாம் தரும முறைஓசை
விளங்கும் வாழவந்தி நாடே 6

மாகமுகில் சேர்தண் டலைகள்எலாம்
மலிந்த மிகமந்தி தாளம்ஒற்ற
ராகஇசைச் சேர்மித் துரங்கள்எல்லாம்
நறைவண் டினம்ஒதக் கிளிவாட்ட
நாக மலர்சேர் நகைபரப்ப
நற்கொன்றைச் செம்பொன் றினம்நீட
தோகை மயில்ஆடக் குயில்பாடும்
3 துலங்கும் வாழவந்தி நாடே 7

துஞ்சற் றெதிர்திளைக்கும் திண்மையால்
துலங்கும் வயிரத்தின் மேடைகளும்
கிஞ்சுகம் கிளர்மணிக் கம்பமும்
கிருபை விபுதர்தம் கோயிலும்சீர்
விஞ்சும்விடங் கமும்சிறந்த காலத்தொடு
விஷ்ணமும் இலங்க
விஞ்சொற் பெருந்தண் ணகமுழங்க
எழில்சேர் வாழவந்தி நாடே.

### மணிமாடம் கோபுரச் சிறப்பு

நெடிய மதிலினுள்ஒரு சுற்றெல்லாம்
நிலைகொள் மறைக்கால் போல்நெடுந்தேர்
படியில் எழுந்துவின் னுள்வளர்ந்து
பஞ்ச வண்ணமேரு எனவயங்க
முடியில் பசும்பொன்னின் குடம்அமைத்து
முடியாத தூரிகை வில்வேடன்
வடிவை எரித்திட்ட பதுமையின்சீர்
வயங்கும் மணிமாட கோபுரமும்

திசைக்குத்திசை காதவழி நீண்டதெருவும்
திரிசூலி யுடன்நடனம்
இசைக்கும் மகாதேவர் ஆலயமும்
இராக வேசுரன் கோயில்களும்
நசைக்குங் குமக்கொங்கை மாதங்கியர்
நண்ணும் கோட்டமும் நான்றகையை
அசைக்கும் கரிமுகன் கோயில்களும்
ஆறுமுக வேலர் திருத்தலமும்

தெருவெலாம் சங்க நாதமுடன்
சிவபூசை யும்குரு பூசைகளும்
கரவிலார் தங்கள் கூட்டமும்போல்
கமலமுக மாதர் ஆடல்களும்
உருவிலான் தன்னை மனதில்வைத்து
உண்மை உரைப்பாரும் களிப்பாரும்
சருவி வரும்நமன் தனைவிரட்டும்
சங்கமா லிங்கர் சங்கங்களும்

மகர தோரண மணிமுகப்பும்
மண்ட பத்தினின் திருஅழகும்
சிகர கோபுர மேடையினும்
சேடிமார் மதுர விஞ்சைபகர்
அகர முதலாதி அருஉருவாம்
அறிவில் அறிவான வெளிஞான
முகர கண்ண னிடபேரில்
8 மூவர் மொழிந்திட்ட முன்னூறும் 12

பவனம் அரவண மேடைதொறும்
பண்பாய் வீற்றிருந்து அனுதினமும்
நுவலும் மறையவர் தொகுதிவைகி
நோற்ற மாடங்களும் கூடங்களும்
நவிலும் பண்ணவர் தவம்இயற்றி
ஞானப் பிரணவச் சுடர்தெரிந்தும்
உவகை யடைவர்கொற் றவர்நோற்பர்
9 குணத்து மாறாம லேஉணர்வார் 13

வெள்ளிப் பருக்கையில் பிரவாளம்
வேய்ந்த மணியில் தரும்கிரணம்
விள்ள வன்ளனப் பிலவங்களும்
வெறுக்கை அரிமயிற் காளகண்டமும்
கிள்ளையோ டிவையும் மழுங்கியொளிர்
விட்டக லாமல் கிளர்ந்துறங்கும்
வெள்ளைப் பணிலம் காகளமும்
10 கரத்தில் எறிமணி மிகமுழங்க 14

சமனும கன்றிடும் இருநல் யோகத்துடன்
பரணசரணத் தினில்சேர்
அமலராசன் அறியப் பூசைசெய்து களிப்பார்
பலர் நிறைவுடன் முயன்ற
அமரர் தொழுதுன்னும் கதிர்தோய் செம்மை
மணியடர்ந்துறு மண்டபமும்
11 உமிழும் வெயிலன்ன வழிமறைத்தற்கு உரிய
பச்சையில் பள்ளியமைத் துயாங்குவார் 15

நவரத் தினப்பொருப் பினைப்பிளந்து
நயக்க இயற்றிய கோபுரத்தில்
நவயில் அரவிந்தத் தோடிருநான்கெனில்
பாளிதம் தந்தாளை நன்குறத்
துவன்றப் புலர்த்த பன்னக மணியை
மிலச்ச வேஇரு சுடரொக்குமால்
கவிகை நிறைகஞ்சுகில் புக்குக் கருதி
இயங்க லுற்றே மகிழ்வார் 16

காரி கைகளில் அடங்காத
காரண சங்கி ராமமுறும்
காரிகையில் செண்டா யுதத்தில் உள்ள
கனமந்தி ரம்கற்றோர் அளவுமில்லை
காரிகையர் நடனம் பயிற்றும்
ககனம் அளாவிய மாளிகையும்
காரிகையும் சிறந்தே குறையாமல்
பண்பு மாறாம யேகதித்து 17

கோகனம் மல்கும் வாவிகளும்
குமுதமும் காவியும் திகழ்பொய்கையும்
கூகமும் சங்கின மும்பொருந்தும்
குளமும் குரம்பின் தடாகங்களும்
நாக வால்விழி யேவயங்கி
நாகம் தாழை மரங்களுமே
பூகம் தெங்கும் சண்பகமும்
புதிய கதலியும் பாகங்களும் 18

## பிள்ளைக்கரையாற்றூர்

விளங்கு அருணமும் சாலிஇக்கு
வல்லிக் கொடிமஞ்சள் இஞ்சிமிக்க
கிளர்ந்த பூவண மும்காவில்
கெடிரெனும் புள்ளினத்து இசைமுழங்க
வளர்ந்து சனர்தெரிந்து அட்டதிரு
மருவும் பிள்ளைக்கரை யாற்றூரில் 19

### பெரிய மாரய்யன் சிம்மாசனம்

நிரைக்கோ ராயிரம் தூண்டரங்கும்
நெடிய பசும்பொன்மண் டபம்தனிலே
தரிக்கும் கற்பகக் காவுபோல்
தளைத்தே பெரியமா ரய்யன்தமக்கு
விரிக்கும் கிரணம்சேர் நவமணியால்
மிருசிங் காசனம் அமைந்தவண்ணம்
16 அரிக்கும் அரனுக்கும் அய்யன்தனக்கும்
ஆகும்மனை மற்றோர்க்கு ஆகாதே. 20

### பெரிய மாரய்யன் வீற்றிருத்தல் சிறப்பு

நகைத்த சீர்அரி யாசனத்தில்
ராசரா சேந்திர மாரய்யன்
பகைத்த தெவ்வர் அங்கம்துணிப்பப்
பதியில கமேறத் திருவேற
புகைத்த நறைஅகில் புகைசாந்தம்
பூவையர் கொங்கைக் குள்ளேற
17 செகத்தில் மிகுந்தசிங் காசனத்தில்
ஏறி ரதிமதன் போலிருந்தார். 21

வாகு வலயமும் சரப்பணியும்
வாகை தரும்பொன் மாலிகையும்
நாகம் அனைய பொற்புயத்தில்
நளின நுதல்தில கம்துலங்க
கோகனக மாலை மணிமார்பும்
குளிர்ந்த முகமும் திருமார்பும்
போகதே வேந்திரன் இவர்எனவே
16 பொருந்த மாரய்யன் இருந்தனரே. 22

### சின்ன மாரய்யன்

அய்யன் திருவடி தனைஇறைஞ்சி
அருள்ஐந் தெழுத்துடன் நீறணிந்து
வெய்ய கலியுடை யாவருக்கும்
மேக நாதன்போல் நிதிநீடி
பொய்யொன்று உரையா உசரகுலன்
போருக்கு அசையாத அடலேறு
செய்ய முகச்சின்ன மாரய்யனும்
19 செங்வேள் எனஅவன் இருந்தனனே. 23

## பிள்ளை மாரய்யன்

காதார் கண்ணி ரதிமாதர்

கவரி யிடச்செங்கை விசிறிகொண்டு

வாதார் வெண்சத் திரைநீடி

மணிவாள் சுமந்துமண் டலிகர்நிற்ப

பீதாம் பரப்பட் டாடையுடுத்துப்

பெரும்பொன் உருமாலை சிரத்தில்சுற்றும்

வேதா கமப்பிள்ளை மாரய்யனும் 24

வீறும் தமையன்பக் கலில்இருந்தான்.

## உத்தண்ட ராயன்

நீலப் பவுரியும் புருவங்களும்

நெடிய மீசையும் சிகையழகும்

வாலப் பருவமன் மதனைவெல்ல

வந்த கலியுக மதனன்என

கோலப் பிறைநுதல் திலதமிட்டு 25

கோவைச் செவ்வாய் நகைவிளங்க

ஞாலப்பார சிங்கமெனும் உத்தண்ட

ராயன் ஒருபக்கம் இருந்தனனே.

## ஆவுடையான்

சிரத்தில் சிலவாள் ஒளிதயங்க

செம்பொற் புயவாகை மாலையுடன்

கரத்தில் பிடித்தமந் திரவாளும்

கணையாழி யும்கதிர் ஒளிவீச 26

சுரத்தர் துரைகோபத் துகில்புனைந்து

சோதி தருநட்சத் திரநடுவில்

வரத்தில் மிகுந்த சந்திரன்போல்

மன்னன் ஆவுடையான் இருந்தான்.

## அமைச்சன் கற்பகத்தான்

செம்பொன் மணித்தூ ணில்சாய்ந்து
சீரும் சினப்புலி போலநித்தம்
வம்புசெய் யும்தெவ்வர் கடலேற
மடவார் மடலேறக் கவியோர்க்கு
உம்பர் தருவென்னக் கொடைநீடும்
உற்ற வலக்கையில் வாள்வயங்க
நம்பும் அமைச்சன் கற்பகத்தாலும்
ராசன் சபையினில் இருந்தனனே. 27

## பட்டாலி குல ராக்கியண்ணன்

இருளைக் கடிந்தசெவ் வரியென்ன
இகலார் மாசற்பம் அதற்கொரு
கருடன் என்ன, இரவலர்க்கோர்
கற்பகக் காவெனப் பொருள்அளிப்போன்
பொருக்க யம்புலிக் கொடியிலங்க
புருரன் பெரிய மாரேந்திரன்
வருடப் பட்டாலிக் குலராக்கன் 28
வலிய சினச்சிங்கம் போலிருந்தான்.

## மசரி மக்கள் தனுக்காமன், பாதருகார்

தத்தை கரமுறு பூதகியும்
தருண மசரியும் இவர்பயின்ற
சுத்தன் எனும்தனுக் காமனுடன்
தூய பாதரு காரோடிவர்
நித்தம் திறைகொண்ட நீரமை போல்
நீரமை விற்றுச் சங்கிராம முற்று 29
கத்தி பரிசைகட் டாரிகுந்தம்
கரத்திற் றுடங்கவில் தொடைவாளும்

### அரச மக்கள் இருவர்

துவள விளக்கிய நகையும்நெற்றி
சோதித் திலகமும் கையில்சுற்றும்
தவளத் தூயவெண் உருமாலையும்
சமுதாடுடன் கையில் சிவுகடையும்
குவளை விழியணை மடமாதர்
கோல மடல்நித்தம் எழுதிடவே
கவளக் கரிபோல் இரண்டரசர்மக்கள்
கனகமலை போலிரண் டருகுநிற்ப 30

### சிங்கக் கவிவாணன்

கனகப் பருப்பதத் தினைஅனைய
கனமும் செறியரி தனையும்கண்டு
மணந்துண் ணுமதச் சிந்துரம்போல்
வணங்கிச் சிலகவி யோர்கள்இன்ப
முனையி சுத்தரிபுருட கண்ணகோனளித்த
முதல்மா ரேந்திரன் குருவின்
இனிதியாக ராசவள் ளல்தரும
சிங்கக் கவிவாணன் இருந்தனனே 31

### வேளாளரில் பயிரகுல நல்லசாமன், சாத்தந்தை குல அர்த்தனாரி மெய்யாண்டாயி தம்பதியர் அவையில் இருத்தல்

தூய வேளாளர் தனில்பயிர
குலத்தில் நல்ல சாமன்னனும்
நேய சாத்தந்தை குலத்திலுள்ள
நிலமைச் சிவகுரு நாதனருள்
சேயன் மதிஅர்த்த நாரிமன்னன்
தனதில் லறம்செழிக்க வும்மகிழ்ந்து
தோயும் மனைவிமெய் யாண்டாயிதன்
சுரதத் தூடன்சிறந் திருந்தனனே 32

### சகோதரர்களுக்கு மக்கள் 70 பேர்

சிந்தை மகிழ்ந்திடும் பழனிமன்னன்
செய்ய சங்கரன் சிதம்பரமும்
விந்தை தருவேலா யுதன்முருகன்
விளங்கும் ஆறுமுகம் நீலகண்டன்
சொந்த நாதனன் கடம்பணனும்
தோமில் செங்கோடு அர்த்தநாரி
சந்தம் பெருநாகப்பன் முத்தணன்
தக்க மயிலப்பன் பொன்னய்யனும் 33

தண்ட மிழ்தெரி கண்ணப்பனும்
தன்மை ஈரெட்டுக் காதலரும்
கொண்டல் உறமும் மாரய்யன் மைந்தராம்
கூறும் இளவல் செம்மலைவிளம்பும்
சண்டம் இலாத ராமணனும்
தகைமை பேரின்ப லட்சுமணன்
கண்டன் சுபர்ளனும் சுந்தரனும்
கருணைச் சந்திரன் பெரியணனும் 34

வம்பு சூடரும் செங்கோடன்
வண்மை லிங்கையன் அர்த்தநாரி
பைம்பொன் மேவும் சுப்பிரமணியன்
பனையன் அண்ணா மலையப்பனும்
நம்பி தேவணனொடு பன்னிருபெயரும்
சின்ன மாரய்யன் நல்கினோர்
கும்பன் முயங்கும் அகிலாண்டனும்
குமர வேலன் கந்தப்பனுடன் 35

அத்த நாரி செங்கோடனும்
அன்பு மாரப்பன் ராசணனும்
சித்தம் கெலிப்புறும் மலையணனும்
செல்வச் சிவலிங்கம் சுவாமியணன்
சத்து வம்கிளர் சுப்பணனும்
பரிவு சடையன் சதாசிவனும்
வித்தை யுணர்பெருமாள் விமலன்
மிகும்அய்ம் மூவர்பிள்ளை மாரய்யன்சேய் 36

மன்னர் மெச்சும் உமாபதியும்
மகிழ்கங் காளன் முத்தையனும்
வண்ணச் செவ்வந்தி ராயனும்சுவர்
மலைக்கொ முந்தன் சிவக்கொழுந்தன்
சொன்ன வகனனும் நிலைதவிராது
துய்யவன் கண்ணன் பசுபதியும்
தன்மை பெருகிய செங்கோடன்
சார்ந்த அத்தநாரியும் பரமன் 37

மன்றல் மேவும் சண்முகராயன்
மதிக்கும் நம்பன் நாதனும்
நன்று இவர்கள் ஈரேழுபெயர்
நகைஉத்தண்ட பூவலவன் புதல்வர்
நின்று விளையாடும் ஈசுவரனும்
நிலமைச் செங்கோடு அத்தநாரி
குன்று நிகர்வரும் இரத்தினத்தான்
கொற்றவன் கயிலாயன் மயேசுபரனும் 38

கண்ணப்பனும் காயத்திரி நாதனும்
கருணை திகழ்நாக மலைராயன்
பண்ணு வதற்கிசை குருநாதன்
பரன்மை அண்ணா மலைராயன்
நண்ணா வுடையானொடு இவர்பன்மூவர்
நறுமை ஆவுடையான் மைந்தராம்
வண்ண மாமுனைக் கார்காத்தும்
வய்ப்புமணி குறையாமல் 39

நீலமலையும் பொன்மலையும் செம்மை
நெடிய பவளக் குன்றமும்அன்ன
கோல மரகத மலைகள் ஒன்றாய்
கூடித் திரண்டது போல்திரண்டு
ஞால மதையுண் டவர்தம்மை
நாடிப் பேரின்பம் அதனைப்பகர்ந்து
வாலை மதலையர் எழுபதுபேர்
மாரேந்திரன் பக்கம் வீற்றிருந்தார் 40

கொழுமை யுளசீர் மலிந்து கோதுற
விழும்நல் லினருடன் மேவி என்றுமே
முழுமணிப் பீடிகை தானின் முயங்கியே
பழுதறு மாரய்யன் இருப்பர் பாலர்கள் 41

## பாலர் சிங்கக் கவிராசனிடம் கல்வி கற்றல்

தெள்ளுமுத் தமிழினைத் தினம்ப யிற்றியே
விள்ளும் அட்டரங் கவிதையும் இயற்றியே
ஒன்றிய காரணத்து உணர்வுள் ஈண்டிய
வள்ளல் சிங்கக் கவிராசன் வழங்கினான் 42

## புலவருக்குக் கொடை

இருந்ததோர் புலவருக்கு ஈகை ஈகுவர்
வரைந்தபட் டயம்தனில் வகுத்தது எப்பவும்
பொருந்தியே அளித்து நாடெங்கும் பொன்தரப்
பெரும்புகழ் நீதிமங் காமல் பேணியே 43

## குருகுலர் பெருவாழ்வு

குருகுலர் யாவரும் குறைவி லாதசீர்
பெருகியே வாழ்ந்தனர் என்று பின்னவர்
தரும்எழில் மைந்தரும் தனது மைந்தரும்
விரவியே சூழ்தர வீற்றி ருந்தனர் 44

## சாத்தந்தைகுலத் தம்பதியர் கொடை

ஆண்டாயியம்மாள் கொழுநனும் அவளும் அன்புற
வேண்டுமிவ் விருந்தனம் யாமுன் விண்டுசீர்
தூண்டுபட் டயத்தினில் சொன்ன நீதியாய்க்
காண்டகும் ஆசையால் கவிஞர்க்கு ஈந்தனர் 45

## மாரேந்திரன் மூத்தமகன் பழனியப்பனுக்குத் திருமணம் செய்ய எண்ணுதல்

இம்முறை தவறுறாது இருக்கும் காலையில்
செம்மை மாரேந்திரன் நினைந்து தேர்ந்துதான்
செம்மல் இன்பமே தருசேட்ட னுக்குஇன்பந்த
ரும்எனச் சோபனம் இயற்ற லுற்றனன் 46

## கீரம்பூர் காட்டுவேட்டுவர் வீட்டில் பெண் சம்மதம் ஆதல்

பெருக்கம் பெருந்திரள் மாரேந்திரன் இவர்நாலு
பேரையும் அழைத்து
மருச்சோ பனம்முகிப் பவும்மடந்தை கேட்டு
வாவென விடுத்தார்
அருக்கன் சுடர்எனக் காட்டுக் குலாதிபன்
கீரம்பூர் தனிலேதான்
தருக்கு லாவிய நாகமலை தமையன்
பொன்னய்யன் தன்மனையில் 4

ஈட்டமுயர் செல்வி இங்கு
காளியோ டிருவர் தன்னில்
தாட்டி கம்திகழ் காளியைத்தான்
தயவு தவறாமல் கேட்டார்கள்
நாட்ட முடன்அவர் தருவன்என்று
நவையில் லாமலு மேபுகன்றார்
கூட்ட மிகுசிங்கக் கவிராசன்
கூறும் மாரய்யனும் கேட்க 4

## மணம் பேசியோர் மாரய்யனைக் காணல்

கற்பகத் தானோடு ஆண்டாயியும்
கனகம தாகவே உளம்களித்தார்
பொற்புள நாரியும் கிடைத்ததென்றே
புகழ்ந்த போதினி லேநடந்து
நற்பவுசு என்றும் கலங்காத
நறுமை பிள்ளைக்கரை யாற்றூர்க்கு
விற்பனர் கள்போய்த் தாமும்சென்று 4
விரைந்து மாரேந்திரன் தமையுங்கண்டார்

### மாரய்யன் தமக்கை நாகவல்லி பெண்வீடு செல்லல்

கண்டுதான் சேதி விள்ளலுற்றார்
காரியம் செயமானது என்றே
விண்ட வார்த்தை உணர்ந்தளியின்
மேன்மை ஈரைந்து நாள்கழித்தே
கண்ட தமக்கை நாகவல்லி
யினையும் மதிக்கவே தான்பயணம்
கொண்டெ முந்திவர் மகிழமனங்
கூர்ந்து தான்அங்கே அனுப்பினரே 50

### மணம் பேசிய நால்வரும் உடன் செல்லல்

தண்டமிழ் சிங்கக் கவிராசனும்
தருணப் பிள்ளை மாரய்யனும்
மண்ட லம்புகழ் கற்பகத்தான்
வாட்கண் நிறையுமை ஆண்டாயியும்
பண்டு மேவிய இகுளையுடன்
பயிலும் தங்கரு லாவிவர
விண்டவ நாத குலோர்துதிப்ப
விரவிப் பூவர நடந்தனரே 51

### பெண் வீட்டார் வரவேற்பும் உபசரிப்பும்

நடந்து மீனத்திங்களில் ராசமைந்
தேதி யானபின் நன்பன்றினத்
தடந்து கீரம்பூர் தான்கடந்து
வள்ளியோர் மேயன் புகட்சீர்
படந்த வெளிதன் னாக முன்னோன்
பண்பு பொன்னய்யன் மனையிலெய்த
தடந்தங் கியசனங்கள் இவரைக்கண்டு
வாவென் றழைத்து இருக்கையளித்து 52




Scanned with OKEN Scanner

ஊங்கள் சரசாஞ் சிதம்புகன்று
உவப்பச் சுருள்பிடித்து உரைத்தனர்கள்
பாங்கு குறையாமல் அமுதளித்தார்
பதமாய் அருந்திப்பின் துயின்றெழுந்தார்
பாங்கு பிசகாமல் அனுப்பிக்கொண்டு
பைம்பொற் கிரணந்தண் குடைநிழற்ற
தேங்கும் எயில்பிள்ளைக் கரையாற்றூர்
சேர்ந்து சேதிவின் டிருந்தனரே 53

## வேட்டைக்குச் சென்ற மக்கள் 70 பேரும் ஓய்வெடுத்தல்

வதுவையாற் றூம்காலை யினைநினைந்து
மைந்தர் எழுபது பேருமொன்றி
மதுகைக் ககனமது உறைவனத்தில்
எய்திக் கொடுவிலங் கினைவதைத்து
விதுவைப் பூரணம் இதயம்குளிர்ந்து
தருவிருக் கம்தனில்
மதுவுலர நறுநிழலில் அன்றுவந்து
யாவரும் சேர்ந்து புக்கார் 54

## இளைய சகோதரர்கள் திருமண ஏற்பாடுகளுக்கு மூத்தவர் பழனியப்பனை வீட்டுக்குச் செல்ல வேண்டல்

இருந்து பழனிமன் னனைநோக்கி
நிருபர் யாவரும் இயம்பலுற்றார்
பொருந்தவும் சுபம்மூன் றாம்தினத்தில்
விவாகம் பொருவற இயற்றுகின்றார்
மருந்துநிகர் புழுக்கலு மதுவுண்ண நீ
மலிந்து வாழ்ந்தெங் களையகன்று
விரைந்து போந்திடு வாய்எனவே
கேட்டலும் உணர்ந்துசிந் தையின்மெலிந்து 5

### பழனியப்பன் தம்பியரை விட்டுச் செல்லமறுத்தல்

உரைத்தான் கனிட்டர்முன் விளித்துநன்றாய்
உறுதி புகல்வனென் றேவலியர்
தரையில் யான்உங்கள் தனையகன்று
ஒருவன் தனிப்பது சரியலவென்று
அரிய நாட்டம் கடந்துகொடுத்து
அன்பு பொலிந்து வென்றியிலடைந்து
முரணு றாமல் மெய்த்தகைதீர்
முருகுச் சுருள்நுகர்ந் திருந்தனனே 56

### எழுபது பேரும் ஒன்றாக அன்றித் தனித்தனியே மணம் செய்வதில்லை என்று சபதம் செய்தல்

வில்லி செயன்முறை யெனவனவோர்
நாக ரிகமாய் விவரமிசைந்து
ஒல்லவே சோபனம் முந்துமுந்தியும்
ஒருவர் எனினும் முயற்பதிற்று
அல்லின் வாட்கையில் தகுவதன்றி
என்று தொழுது யருவந்துமற்றும்
கல்லி யனலை சந்திரா யுகத்தை
கடந்து கொடுப்பமென் றேசெப்பவே 57

### 70 மக்களும் வீட்டுக்கு வரல்

தாண்டிக் கொடுமென்று ராக்கமன்னன்
தண்பொருந்த வேதான் கேட்ப
ஈண்டிக் கடந்தனர் அனைவோரும்
இளைப்பாறியும் உள்ளம் தேர்ந்துநின்று
பூண்ட வீரவெம் பாய்மிசையே
புக்கு நீர்மை மங்காமலுமே
பாண்டிக் கேதனன் பதத்தையுண்ணி
பாணர் சூழ்தர நடந்தனரே 5




Scanned with OKEN Scanner

### வீட்டுக்கு வந்த மக்கள் மாரய்யனைச் சந்தித்தல்

வீறு கொளும்பதி யடைந்துகொள்ளை
இன்பம் பொருந்தவே வீற்றிருந்தார்
தேறு மணச்செறு பீடிகைக்கு
சென்று மாரய்யன் தமையும்கண்டு
நாறு சோதியின் மலர்கொடுபோய்
நளினம் இலங்கவே முன்வைப்ப
சீறு மதிரற் பூட்கைபோல் விளித்து
தெளிந்து பார்த்திபன் விளம்பலுற்றார். 59

### திருமண சமயத்தில் வேட்டைக்குச் செல்லல் தகாது எனல்

சாதித் துணர்முன் றுக்கியதும்
தன்மை பிசகாமல் புகலியெனப்
பேதம் அவரவர் போற்றிநின்று
பெருமை நிறைந்திட விளம்புகிறார்
நீதி முறைமட மான் தெரிவை
நேரில் மணம்பெறும் தருணத்தில்
போதித் தெழுதசப் பெயரும்வனம்
புகுந்த வாசகத்தில் அகற்றினரே 60

### மணமகன் பழனியப்பனை ஓராண்டு ஆண்டாயிடம் தங்கச் சொல்லல்

கற்பகா வுரள்வது வையினைமுன்
மைந்தனுக் கென்று கருதிநின்றோர்
உற்பனம் போலிவ் வுரைபடாத
உறுதி யோர்ந்துபின் காவலனும்
அற்ப நினவுளித்தார் புதல்வரென்று
அழுங்கி ஓராண்டு முற்றும்
நற்பண் ணவர்என இருந்து
நனியின் குணம்கொள் ஆண்டாயியுடன் 6

### ஒரு ஊரில் எழுபது சகோதரர்களும் ஒன்றாகத் திருமணம் செய்துகொள்வோம் என்று கூறல்

புன்மை யகன்றசொல் இயம்புகிறார்
புரையா நீயெழுபது மைந்தருக்கு
தன்மை நெறிகெழும் இலக்கணமும்
வயங்கி வசிவரும் தருணமுறும்
பொன்மெய் எழுபது மடந்தையுடன்
புரையில் லாமலும் ஒருநகரில்
பன்மை தெரிந்துறைவர் தெரிந்திவ்வன்
பணித்தால் மன்ற லும்முடிப்போம் 62

### மாரய்யன் அப்படிப்பட்ட உறவு இருக்குமிடம் வினவலும், ஓடப்பள்ளியில் தேடலும்

முடிப்ப னென்னவிள்ள நீர்பரியாய்
முதன்மைக் குருகுல மன்னவரும்
கடிப்புரை யும்உறவு இருக்குமிடம்
கழறுவாய் என்ன வேபுகல
வடுப்பிலா ஓடை யம்பதியில்
வாட்கை கலங்காமல் உணர்வனென்ன
படிக்குள் ஆய்ந்துமே வருகிறயான்
பெருமைச் சனங்களும் வரப்பண்ணினார் 63

### பிள்ளைமாரய்யன், சிங்கக் கவிராசன் மற்றும் சிலர் மணமகள் நாடிச் செல்ல முற்படுதல்

பன்ன விறற்பிள்ளை மாரய்யனும்
பணிப்பில் சிங்கக் கவிராசனும்
முன்னின் மேவிய சிலதியரும்
முற்றோர் சிறந்திடத் தூசிகமும்
மன்னு லாவு மேயளித்து
வண்மை விசித்திர மும்பிறங்க
மன்னன் உறுதியென் றேயளிப்ப
மகிழ்ந்து தோகையர் இசைந்தெழுந்தார் 64

### இசைக்கருவிகள் முழங்க மாரய்யனை வணங்குதல்

துடியும் தவண்டையும் சங்குடன்சின்னம்
துலங்கக் கரிக்கொம்பு நாகசுரம்
இடிசேர் மழைபோல் குமிறிடவே
ஏகும் பெரியோர்கள் எழுமென்றார்
மிடியற்கு உதவிய குடைக்கன்னன்
வெம்போதகக் கண்ணன் மாரேந்திரன்
அடியில் திருமுடி சாய்த்துப் பின்னும்
அரசைப் புகழ்ந்து தூதருடன்கூட 65

### ஓடப்பள்ளிக்குப் புறப்படல்

உச்சித மாக மூன்றுபேரும்
ஓடையம் பதிக்கு ஏகவுமே
கொச்சை மாதமும் மறையவர்நாள்
குலவும் சோதி நட்சத்திரமும்
மெச்ச இருபானொன் றாம்தேதியில்
வியன்மாரய்யன் பக்கம் மொழிபயிற்றி
அச்சம் அகலவிடை வாங்கிக்கொண்டு
அன்பாய் மதில்வாச லும்கடந்து 66

### நல்ல நேரமும் நல்ல சகுனமும்

வருவதோர் அத்தம் தன்னில்
பன்னக வயிரி தானும்
தருவளர் சுரபி போல
தரித்துமுன் னகத்தில் ஏற
கரடம்ஒன்று இயற்கை யாக
காரியில் அப்போ தேக
தரணியில் இருந்த குக்கில்
தாழ்ந்துநேர் வலத்தில் போக 67

மகிழ்ந்து அர்த்தநாரீசுவரரை நினைந்து
செல்லல் மீண்டும் நற்சகுனம்

கண்டுளம் துலக்கி நின்று
காரணம் என்று நோக்கி
அண்டர்நா யகன்செங் கோட்டில்
அமர்ந்ததற் பரனை உன்னி
கொண்டுசற் றேக மற்றும்
குருங்கரி யூகம் ஒன்று
விண்டிடை இடத்தில் செல்ல
நன்மையும் வியந்த தன்றே 68

எல்லோரும் திருச்செங்கோட்டை அடைதல்

நல்ல ஓடையம் பதிநோக்கி
நாரியர் நடனமா டியும்நடப்ப
பல்லிசைச் சிங்கச் கவிராசனும்
பக்கம்செறி பிள்ளை மாரய்யனும்
செல்லும் வழிகடந்து வகையுடன்
சிறந்த கோதையம் பதியடைந்து
இல்லகந் தனிலே முரசு
கேதனன் போல வேயிருந்தார் 69

திருச்செங்கோட்டின் பெருமையும் வழியாடும்

குளிர்ந்த தண்திருக் காவிரி நதிசெறி கோலம்
கிளர்ந்திடும் புரையகிக் கிரிதன்னிலே கிருபை
விளங்க ஒன்றின காட்சியும் மேவிய மென்சீர்
வளம்பொ ருந்தியே மகிழ்வுற நவையற விளங்கும் 70

கிஞ்சுடர்க் கச்சு மல்கிய வர்க்கமும் கிளர்ந்து
விஞ்சு மாமணி சிறந்திடும் பன்னக வெற்பில்
துஞ்சல்கொண் டரனிடமதில் தோன்றிய உமையும்
மஞ்சு தங்கியே செழிப்புறும் கனநகை மாதோ 71


Scanned with OKEN Scanner

உம்பர்நாட் டுப்பதி உரககிரி நாட்டில்
அம்புயங் களும்செங் குமுதமும் படர்ந்திடந்த
பைம்புனல் தடாகங்களும் பதிதொறும் இசைந்த
வம்புலாவிய தொடவையில் இன்புற வழங்கும் 7

தெளிநிறைந்த நாகப் பருப்பதத்தினைச் சிறந்த
விளைவுறும் குகனற் கவியும் அனுதினம் மேவி
வளரும் ஊர்தொறும் மேடைகோபுர மணிமாடம்
நளினமிக்க காவிரிசெறி பூந்துறை நாட்டில் 7

மன்னன் மஞ்சரி பிசகாத
வாழ்வு பெருகிய மேன்மைநெறி
துன்னும் கெலிப்புறு வரிசைமுறை
சுபமும் சேவையு மேமுயன்று
வன்ன முலைமாதர் ஆடலுடன்
மலர்கள் சொரிந்திடப் பாடல்களும்
நன்னயம் குறையா தியங்கும்
நாகப் பொருப்புயர் தலந்தனிலே 74

## ஓடப்பள்ளி வருதல்

குருவின் வாரத்தில் உரைத்துயோமம்
துய்த்து மனம்குளுந் தேதுயின்று
கருதி வைகறைப் பொழுதினில் எழுந்து
கனகச்செங் குன்றினில் வைகும்
தருமச் செல்வியின் பாகர்பதம்
தொழுதுதனது உள்ளுதல் செயமாக
வருகக் குளித்துமெய் ஓடைநகர்
வந்தார் காப்பியன் வாசல்தனில் 75

### மூவரும் வந்த நோக்கம் கூறுதல்

உனித மாகவும் ஓர்நிழலில்
உறைந்து பிள்ளை மாரய்யதீரனும்
புனிதம் செறிசிங்கக் கவிராசனும்
புகழ்பற்றிய மேன்மை ஆண்டாயியும்
மனித அன்பினில் பண்புற்றுரைப்பவரை
அழைத்து நோக்கி அஞ்சலித்து
நனிதங்கிய மன்றலென உய்கிறாரென்று
நயம் வழுவாமல் சென்று 76

### மூவரும் ஓடப்பள்ளி அவினாசியிடம் செல்லல்

செப்பு பொன்அவி நாசிமன்னன்
பக்கல்என ஏவவே சென்றனர்
தப்பில் பொருநன்தன் குழுவின்முன்னே
தாழ்ந்து கரம்குவித் தேற்றிநிற்ப
வெப்பு றாமல் யாரெனத்தூதரும்
சொல்லுவார் மேன்மை ஆண்டாயியும்
விப்பிரமச் சிங்கக் கவிராசனும்
விருத்திப் பிள்ளை மாரய்யனும் 77

### ஓடப்பள்ளித் தலைவரைச் சந்திக்க மாரய்யன் அனுப்பினார் என்று கூறுதல்

மாரேந்திரன் என்னும் மகாராயன்
வார்த்தை இரண்டுரை யாதவள்ளல்
சீரேந்திய செய்யுட் கவிவாணர்
செல்வ வாழவந் தியின்நாடன்
பாரேந்திய கீர்த்தி ஓடப்பள்ளி
பதியில் விளங்கச்செங் கோல்நடத்தும்
தாரேந் தியபுயத்து அரசர்தமைச்
சந்திக்க எங்கள் தனைவிடுத்தார் 78




Scanned with OKEN Scanner

## வரவேற்பு

விடுத்த தூதரை நாடிமற்ற
   மேன்மைப் பொன்அவி நாசிமன்னன்
பிடித்தி பாமல் மனம் இசைந்து
   சிறந்தோ ருடன்மிகுந் தேயெழுந்து
அடர்குன் றாத்துந் துமிமுழங்க
   ஆர்வமாய் எதிர்கொடு மகிழ்ந்து
தடத்தின் எழுகரை நாட்டிறைவர்
   நல்லது என்ன வரவேற்றார் 79

மகாசுதா கரனும் புருவையண்ட
   பொன்தகு மனையில்
விகாதமற மரகதத்தையும் கன்முகர்தமும்
   ஒன்றி வேய்ந்திலங்க
மகோததியை யுண்ட குறும்பண்ணவன்
   ஓங்கல்வழிவீச மாற்றலர்கள்
புகாதகலைவை படர்ந் துரானம்
   புலத்திப் பொற்புறு நகர்க்கு 80

வார குருகுலர் தமைச்சூழ
   மலர்ப்பொற் பரியையா யிரமிளற்ற
வீறு பெறுவெண் சாமரைவீச
   விளங்கும் ஆலவட் டம்மிளிற்ற
தேறு தமிழ்வாணர் புகழ்ந்தோத
   சிலதி மாதர்நந்தா விளக்கெடுப்ப
நாறும் தொங்டைவாகைப் புயம்குலுங்க
   நளினச் செவிசவுளிக் கொளிவிளங்க 81

வீசும் கரமும் இந்திரன்போல்
   விளங்கும் நகையும்ஒய் யாரமுடன்
பேசும் திருவாயும் மிகுமார்பும்
   பீதாம் பரத்துகில் போர்வைகளும்
தேசு பெருமுண்டா சும்பாகும்
   சீனிச் சிகைவாளர் உடலழகும்
மாசிலா வண்மைக் குருகுலத்தோர்
   மாலோன் இனம்போல் விரசிவந்தார் 82

சந்தித்து இருவரும் தழுவிக்கொண்ட
சமயந் தனில்குரு குலத்தோர்கள்
விந்தைப் புயவேள் மாரையன் விடுத்த
வேந்தர்தமைக் கையோடு அழைத்துக்கொண்டு
முந்துத் தமிழும் முரசினமும்
முழங்கக் கிரணம்பொன் மாளிகையில்
வந்து உச்சிதமெத் தையிலிருத்தி
வண்மைக் கடவுளர் சுகமியற்றும் 83

பாலும் பழம்சர்க் கரைதேனும்
பரிய வருக்கைமா கதலிஇனி
நாலும் கனிநல் அமுதமுடன்
நன்றாய்ச் சமைத்து அமுதளித்து
மேலும் புயமும்மெய் அடங்கலும்தான்
விளங்கச் சந்தனம் புழுகுபூசி
ஓலம் செறிகடல் உலகம்மெச்ச
உறவென்று அறிந்துசொற் கழரலுற்றார். 84

## பெண்கேட்டல்

பேதைப் பருவம்சேர் அருந்ததிபோல்
பிறங்கும் கற்புடைப் பெண்கள் உண்டென்று
ஓதப் பெரிய மாரய்யன் கேட்டு
உள்ளம் களித்தந்த உறமுறையாரிது
காதுக்கு இசைய விதம்பேசி
கனமும் பெருமையும் திறமும் சொல்லி
நீதித் தருபெண்ணை வதுவைசெய்ய
உங்கள் அருகில்எங் களைவிடுத்தார் 85




Scanned with OKEN Scanner

## உறவுக்கு மகிழ்ச்சி

சொற்ற மொழியிவர் செவியுறவே
துங்கம் செறியோடைக் குருகுலத்தோர்
வெற்றித் திருப்புயம் தனில்செம்பொன்
வில்லைச் சரமும்முத் தும்துலங்க
கொற்றக் குடைநிழற்ற வீற்றிருந்த
கொலுவில் யாவரும் கொண்டாட
உற்ற பெரியோரே உங்களிட
உறவைப் போலப் பின்னையுண்டோ ? 86

## சிங்கக் கவிவாணர் குலம், மகளிர் பற்றிக் கேட்டல்

என்ன வுடன்உங்கள் பாற்குலமும்
இலங்கக் காவலர் தன்பெயரும்
மன்னர் அகத்தினில் வளர்கடவுள்
மாளைச் சிறுமியர் இலக்கங்களும்
பன்னுதிர் என்று கவியன்விள்ளச்
சந்திரன் வார்த்தை என உரைப்பான் 87

## ஓடப்பள்ளியர் தங்கள் குலம்பற்றிக் கூறல்

வரிசைதிகழ் வேந்த வேட்டுவனும்
வாழ்க்கை அரிச்சந்திர வேட்டுவனும்
பரிவு குணம்காட்டு வேட்டுவனும்
பண்பு புன்னாடி வேட்டுவனும்
விரியம் பெறும்மணிய வேட்டுவனும்
விப்பபாப் பொன்ன வேட்டுவனும்
வெறிவுறும் கம்பிதந் துலைக்கும்
மாண்பு நிறைபுல்ல வேட்டுவனும் 88

### ஏழுகுலம் சார்ந்த பதினொருபேர் பெயர்கள்

சேணிற் புகன்மைசிங் காதவண்மை
செய்ய பொன்அவி னாசிமன்னன்
சோணற் கவின்குரு நாதமன்னன்
சொற்ற சிங்கப் பெருமாள் மன்னன்
பேணப் புனிதுயர் தவசிமன்னன்
பிழைஇல் குஞ்சர நாதமன்னன்
தாணுப் பூசையில் பிசகாத
தரும மந்திரி யோகிமன்னன் 89

சந்தச் சுந்தர நாதமன்னன்
தன்மைநிறை அர்த்தநாரி மன்னன்
முந்த திருச்செங் கோடமன்னன்
முயலும் செழுமை தீர்த்த கிரிமன்னன்
சந்தம் பொருந்தும் சந்திரன் மன்னன்
இவைபன் னொருவரும் பயின்றெடுத்து
உய்ந்து வளர்த்திடும் தெரிவையர்கள்
உள்ளதினிது மெய்மையில் புகல்வாம் 90

### பெண்கள் பற்றி கூறல்

பொருனன் குலத்தில் பொன்அவினாசி
யப்பன் புதல்வியர் ஏழுபேர்
குருநா தேந்திரன் தன்மனையில்
குலவு மங்கையர் வாழ்வதொன்பான்
அரிச்சந் திரன்குலம் தனில் உகந்த
சிங்கப் பெருமாள்தன் தனயைதசம்
கருணைத் தவசிப் பூபாலன் இல்லில்
கதித்த பேதையர் ஒரு சத்தமாம் 91

காட்டுக் குலத்தில் குஞ்சர நாதன்பால்
காரிகையர் இருமூன்றாமால்
கூட்டும் தரும மந்திரி அகத்தில்
துலங்கும் சிறுமியர் அட்டமதாம்
நாட்டுக்கு இனிய புன்னாடிகுலநற்
சுந்தரநாதன் தன்புதல்வி ஐந்தாம்
கோட்டி மகிழ அர்த்தநாரி மன்னன்
தந்த கோதையர் இருநான்காம் 92

மணிய குலத்தில் செங்கோட் கோன்
அளித்து வயங்குமைம் பேதையர்கள்
மணப்பொன்ன குலத்தில் தீர்த்தகிரி
ராசன்அருள் மங்கையர் மூன்றாம்
மணியப் புல்லகுலச் சந்திர நிருபன்
மனையில் ஐயீரண்டாகும்
குணமாய் இவர்பால் எழுதசமின்
கோதில் சீர்நெறி யாய்உய்கிறார் 93

## பொருத்தம் பார்க்கக் கூறல்

மாரன் எழுபது குமரருக்கும்
வரியின் இதமுடைந் தலர்ந்தமலர்
நாரி தமக்கிணை எழுபதுபெண்
நாங்கள் கொடுத்தோம் நம்புதிர் நீங்கள்
சீரும் சிறப்பும் செல்வம் விளங்க
செவ்வேள் அனையநற் குமரர்கள்தம்
பேரும் மடமாதர் பேர்க்கு இசைய
பெற்ற பொருத்தமும் பாருமென்றார் 94

## சோதிடன் கூறல்

சோதிட இருடியை அழைத்துநிதி
சொரிந்து நிமித்தமும் பகரும் எனவே
ஆதிமறை நாலும் யாகமும் யாவும்
தெரிந்தந்தச் சபையில் சொல்வான்
ஓதி விசும்பும் சந்திரன் ரவி
அகிலம் கடலும்உள்ள காலம்மட்டும்
நீதி யுள்ள எழுபதுகுமரர்
நீங்கா மனைவியோ டிருப்பர்என்றான் 95

## தானம் தந்து பொருத்தம் கேட்டல்

இருப்ப ததிகம் நன்றெனவும்
உவந்துளங்கள் குமரர் மாதருக்கும்
விருப்பம் பெறும்பெயர் விரித்துணர்ந்த
விபரம் தரிக்குமென் றேவிளம்ப
வரைப்பொற் புயமண வாளருக்கும்
மங்கையர்க்கும் தானம் வழங்குமென்ன
திருப்பண் புறஇரு வோரும்உரை
செப்புவார் சோதிட இருடிமுன்னே 96

பழனி மன்னனுக்கும் குமராயிக்கும்
பயில்சங் கரனுக்கும் வேலாயிக்கும்
அழகு சிதம்பரன் நாகாயிக்கும்
வேலா யுதன்தன் வசியம்மாளுக்கும்
அழவு முருகன் பொன்னம்மாளுக்கும்
ஆறுமுகம் முத்தம் மாளுக்கும்
செழுநீல கண்டன் சவுரிக்கும்
முஞ்சீர் நாதனுக்கும் காமாட்சிக்கும் 97

கடம்ப ராஜன் பூங்கோதைக்கும்
கனக செங்கோடன் மெல்லிக்கும்
மடங்கல் நிகர் அத்தநாரிக்கும்
வடிவுதிகழ் கவுரியம்மாளுக்கும்
விடங்க நாகப்பன் வேந்தாயிக்கும்
மீன முத்தையனுக்கும் மாராயிக்கும்
முடங்கல் மயிலப்பன் மூர்த்தியம்மாளுக்கும்
உண்மைப் பொன்னையன் பெரியாயிக்கும் 98

கண்ணப்ப னுக்கும் செவந்தாயிக்கும்
கருணை ராமனுக்கும் மயிலாயிக்கும்
நண்ணும் இலக்குமன் சின்னம்மாளுக்கும்
நயசுந் தரனுக்கும் செல்லம்மாளுக்கும்
மன்னச் சந்திர ராஜனுக்கும்
அமிர்தமுறு சுவாமியம்மாளுக்கும்
வெண்மைப் பெரியணன் மீனாட்சிக்கும்
மிகுசெங் கோடனுக்கும் சவுந்தரிக்கும் 99

லிங்கய்ய னுக்கும் குளந்தாயிக்கும்
இயல் அத்தநாரிக்கும் பேச்சிக்கும்
எங்கள் சுப்பிரமணிய னுக்கும்
இசைந்த சங்கரி யம்மாளுக்கும்
மங்கா நீர்மை அண்ணாமலைக்கும்
மவுலிமுயல் ஆனந்தாயிக்கும்
செங்கை யப்பணன் முத்தாயிக்கும்
செய்ய தேவணன் மதங்கிக்கும் 100

பயன்சேர் அகிலாண்டன் நாகமணிக்கும்
குமர வேலனும் பாகாயிக்கும்
மயம்சூழ் கந்தனுக்கும் கவண்டாயிக்கும்
அத்தநாரி ஞாளியம்மாளுக்கும்
செயில் செங்கோடன் செலம்பாயிக்கும்
மாரப்ப னுக்கும் தேவாயிக்கும்
செயவி ராசனும் தெவியானைக்கும்
மலையனன் தீர்த்தகிரி ஆயிக்கும் 101

சிவலிங் கனுக்கும் காமாட்சிக்கும்
சேர சுவாமியணன் கருணைக்கும்
தவத்தில் சுப்பணன் நம்பாயிக்கும்
சடையன் தனக்கும் பொன்னீலிக்கும்
சவிச் சதாசிவன் நிமலிக்கும்
தகமைப் பெருமாள் பெருமாயிக்கும்
கவலை யகற்றும்சொல் விமலனுக்கும்
கான விசாலாட்சி யம்மாளுக்கும் 102

இலக்கணம் சேரும் உமாபதிக்கும்
வரிசையுள கயத்தம்மாளுக்கும்
கலக்கும் துலைக்கங் காளனுக்கும்
காரிகை யின்மெய்க் கமாயிக்கும்
சிலைக்கை முத்தையன் திருவாயிக்கும்
செவந்தி மன்னன் சனகியம்மாளுக்கும்
மலைக்கொ முந்தன் பொன்னம்மாளுக்கும்
சிவக்கொழுந்து குழந்தையம் மாளுக்கும் 103

ஆற்ற தங்கரை வெம்பாலனுக்கும்
அறிவு பசுபதி பார்ப்பதிக்கும்
சீற்ற மிகுந்த செங்கோடனுக்கும்
தேற்றகுணச் சீதையம் மாளுக்கும்
வீற்ற மகல் அத்தனாரிக்கும்
மேன்மை அங்கயற் கண்ணிக்கும்
தேற்றும் பரமன் வள்ளியம் மாளுக்கும்
தீரச் சண்முகன் வேதம் மாளுக்கும் 104

விசுத்தி தெரிந்த மயேசுர னுக்கும்
விளங்கும் அயிராணி யம்மாளுக்கும்
விசித்தி ரம்கொள் கண்ணப்ப னுக்கும்
விரியற் காசியம் மாளுக்கும்
சசித்தன் காளத்திரி மலைக்கும்
தடநாக மலையம் மாளுக்கும்
கசத்தல் சேராக் குருநாத னுக்கும்
கமல பொற்கரப் பழனியம் மாளுக்கும் 105


Scanned with OKEN Scanner

ஏம ரிடம் அண்ணா மலைக்கும்
இயன்ற கமல நாராயணிக்கும்
வாம நண்ணா வுடையா னுக்கும்
வயங்கு புனித கண்ணம் மாளுக்கும்
நீம மான குமார ருக்கும்
நிலைமை மாதருக்கும் பொருத்தம்
தாமம் புணையம் சோதிட ரிசி
தேர்ந்து பலன்நன்றாய்த் தரமிது என்றான் 106

## திருமண நாள் குறித்தல்

என்ற பிறகு நட்சத் திரமும்
இசைந்த கணயோக நாள்வாரம்
ஒன்றும் குறையாமல் வதுவை தமக்கு
உகந்த நாள்சோம வாரம் என்ன
நன்றி யெனவே அந்தணன் உரைக்க
ராச ராசர்கள் அனைவோரும்
சென்ற கடல்வங்கம் கரை யிடத்தே
சேர்ந்தபடி போலுளம் களித்தார்கள் 107

## திருமணத்திற்கு விரைவில் வருமாறு விடைகொடுத்தல்

குரவன் அங்஭ணம் சொல்லும் போது
கொற்றக்குடை ஓடைக் குருகுலத்தார்
சரசம் பலபல பகர்ந்து பின்னர்
சங்கம்செறி சிங்கப் புலவருக்கு
வரிசை கொடுத்து மண்டலிகன்
வெற்றி மாரேந்திரன் விட்ட பெரியோர்க்கு
விரைவில் வரச்சொல்லி விடைகொடுக்க
விடைகொண் டவர்களும் நடந்தனரே 108

### ஆண்டாயி திருச்செங்கோட்டில் வழிபாடியற்றுதலும் மாரய்யனிடம் விபரம் கூறுதலும்

நீலன் தினம்தனில் ஆண்டாயிதன்
சகிமார் இருபக்கம் நிறைந்துவர
தால மிரட்டச் செங்குன்றைநகர்
சென்றனர் இரவில் தானிறைந்து
மூலம் திகழ்சுழி முனைநடுவில்
முயங்கு முளதெனத் தகுமிதவை
ஏல நினைந்து புராந்தகனை
இதயத் திசைந்தெல்லை வரும்போதில் 109

மக்கள் சிறக்கவும் எழுந்து செவ்வி
மலிய நடந்தனர் தனஞ்செயன்பொன்
மிக்க சிரோமணிக் காரைநகர்
வென்றி குறையாமல் தான்எய்தி
செக்கர் மணிதுடங் கியமகுடம்
புனைந்து செழித்த மாரேந்திரன்
தக்க எயிற்பத்தி ராசனையே
கண்டு சரித்திரம் சாற்றலுற்றார் 110

தேவரீர் முன்னம் சொன்னபடியே
சிறிதும் வழுவாமல் திகழ்தரங்க
காவிரி வாசம் செறிஓடை
காவலர் முன்பு உரைத்தபின்பு
யாவர் எவரும் கொண்டாட
வந்தவர் குருகுல குலேசர் தங்கள்
சேய்வ ரேசர்க்குத் தமது தெய்வத்
திருப்பெண்ணைத் தருவம் என்றார்கள் 111

### மாரய்யன் இராக்கனிடம் கூறுதல்

பெண்ணை நல்குதல் நன்றென்று பீடுற
தண்ணுகந் துரைத்தீர் என்று தான்புகழ்
அண்ணல் மாரய்யன் ராக்கனை அன்புடன்
கண்ணின் நோக்கி உவந்து நவிற்றுவான் 112

வாச மாகத் தரையில் வயங்கி
மாசி லாத சிறந்தவர் வாழ்வுற
மாசை யாப்பதிச் சனங்களை யேமகிழ்ந்
தாசு ராமல் அவைமன் றலின்முன்னால் 113

வாவென்றே சொல்லி வாசியும் முதுவரும்
தேவர் போலச் சிறந்து துலங்கவே
ஏவி னான்புரை யேலுங் குழாத்துடன்
காவலன் சென்றொன்பான் நாள் கறந்தபின் 114

பிள்ளை மாராயன், சிங்கக் கவிராசன், கற்பகத்தான்
ஆகியோரை அனுர்புதல்

நரைத்திங்கள் இரண்டாம் தேதியில்
நயவிராக் கதிரவன் தினத்தில்
வரைத்திண் டியற்ற புயமுடைத் தருண
வாழ்வுசேர் பிள்ளைமாரய்யனும்
விரைத்தண் மொழிபயிற்றிய கருணை
விளைக்கும் சிங்கக் கவிராசனும்
துரைத்தொன் னிலமைகற் பகத்தானும்
தொழுப்பி லாதசொல் தேவர்களும் 115

இவரை மனமகிழவுமே ஏகென
ஏகி னார்பொன் வெள்ளிலை மதிப்ப
தவறிலக் கிரணச் செங்குன்ற நகரெய்திச்
சருது நாந்தே தயவாய்
நுவலரும் பொன்னி நதியருகே
நுரையுடை ஓடை யருகே
உவகை நிறைவுற உறைந்து பின்னர்
உண்மையுடன் வல்லி யிலைபுரிந்து 116

## திருமண ஏற்பாடு

புரிந்து தீரம் அமுழ்தியங்கும்
பொம்ம லருந்திமெய்த் துயில்துறந்து
விரைந்து சேண்மைய தாய்எழுந்து
விரவும் அங்கார கன்தினத்தில்
தெரிந்தும் அவர்பக்கம் உரைத்ததன்று
வந்தியக் கரையாற்றூர் சேர்ந்தரசன்
பொருந்தும் தவிசு கண்டென மேன்மையாய்ப்
புகலச் சுகமன்றல் ஆற்றலுற்றார் 117

தேரும் குறிஞ்சியும் மகமேரும்
செம்பொன் வடவிந்தம் எனத்திருத்தி
காரும் கதிரும் மதிதேய்ந்த
கனகோ புரத்தில் ஓவியம்தீட்டி
சீரங்க மதான மணிக்கூடம்
செறிந்த மாளிகை மனையில் இந்திரன்
ஊரங்க மதென்னச் சிறப்புச் செய்தார்
உடுவும் இரவியும் எழுந்தாற்போல் 118

மகர தோரணம் அலங்கரித்து
மயனரி லக்கம்பந் தலும் அமைத்து
சிகர முலைமாதர் மதனுருவன்
செங்கைப் பெரிய மாரேந்திரன்
பகர அரிதான எழுபதுபேர்
பாரகே சரியன்ன புதல்வருக்கும்
அகர முதலெழுத் தான் அறிய
அன்பாய் மணவாளக் கோலம்செய்து 119

மகிழ்ந்து புந்தினத்தின் முன்னரே
அருக்கன் சுதன்வாரம் தனில்திரளாய்
இகண்டி டாமல் ராக்கமன்னன்
இருக்கை நகரடைந்து வந்தநாள்
பகர்ந்த விண்மணி யின்பகலில்
பற்றும் குருகுலர் கோத்திரம்
உகந்து நெறிபிச காமல்வந்த
குலத்தின் உள் துகையினை விளம்பும் 120

கவ்வை யகற்றும் பூந்துறை நாட்டில்
வேந்த வேட்டுவன்
கதித்திகந் துலவும் வடகரை நாட்டில்
தகைமைக் கரடிவேட்டுவன்
திவ்விய காஞ்சிக்கோயில் நாட்டில்
வெம்ப வேட்டுவன்
செவ்வி ஒடுவங்க நாட்டினில் சேர்வை
இலங்கை வேட்டுவன் 121

குறுப்பு நாட்டினில் உரிமைப்படை வேட்டுவன்
தன் செங்கோல்
செறிந்த வெறுக்கை ஆறுநாட்டினில் நெறியாய்
அரிச்சந்திர வேட்டுவன் பாங்காய்
நிறைபொன் குலுக்கிநன் னாட்டினில் தணம்ப வேட்டுவன்
நன்னிலமை பெற்று
சிறக்கும்பொன் மணநாட்டினில் வெங்கச்சிவேட்டுவன்
அரசு செய்து 122

மேன காவடிக்கா நன்னாட்டிலே விளங்கும்
மணிய வேட்டுவன் நிறையாய்
மீனசேர் வாரக்கநாட்டிலே செல்வ
மோக்காளி வேட்டுவன்
வான சேர்நசை அண்டநாட்டினில்
சுண்டை வேட்டுவன் கைவில்வைகி
பானகோர் வைகாவூர் நாட்டில் வாகை வேட்டுவன்
விரல் பரிந்து 123

சேடு துவன்ற நல்லுருக்கா நாட்டில் புல்லை வேட்டுவன்
செயமாய்
சேடு துவங்கும் தென்கரை நாட்டில் புன்னாடி வேட்டுவன்
தினம்வழங்கி
சேடுறும் தட்டயநாட்டில் நிகழும் பட்டாலி
வேட்டுவன்
சேடுகுன்ற தலைய நாட்டினில் செகுத்த
கதுகால வேட்டுவனும் 124

மஞ்ஞை குலவிய சேல நாட்டினில்
விசயம்வளர் சேர வேட்டுவனும்
பிஞ்ஞுகன்சேர் காங்கய நாட்டினில்
சாந்தப்படை வேட்டுவனும்
யஞ்ஞை யகன்ற வெங்கல நாட்டில்
அண்ணல் மீள வேட்டுவனும்
மொஞ்ஞுகையி கிழங்க நாட்டிலே
முதன்மை யுடையர் கிழங்க வேட்டுவனும் 125

வண்ணங் குலவு மெய்யுரு நரைய நாட்டினில்
காட்டுவேட்டுவன் வயங்கி
நண்ணும் அரைய நாட்டினில் அரசுசெய்யும்
கரைய வேட்டுவன் நண்ணீர்
வெண்ண யந்தரு பூவாணி நாட்டில்
பூவாணி வேட்டுவனும்
அண்ணல் பிறந்த எழுகரை நாட்டில்
உசர வேட்டுவனும் அடல் 126

நெறியின் பெருமை செய்தே சட்சதுர
நாட்டில் நிருபரும்
செறிகாலையில் வறியரவ கற்றியபுனித
காளத்தி புருடக் கண்ணப்பனும்
குருகுலர் யாவருக்கும் அறுநான்கு நாட்டவர்க்கும்
எழுதிய மடல்
வரைந்தே விடுத்தான் அவர் கண்டபின்
கோதை நகர்க்கு 127

**திருமண மடல் அனுப்பிய வேட்டுவர் தொகை.**

செய்யும் சாத்திரம் பலவும் செய்ய
வேந்த வேட்டுவனும் மீன வேட்டுவனும்
ஒயர வேட்டுவனும் சேந்த வேட்டுவனும்
கிழங்க வேட்டுவனும் செம்ப வேட்டுவனும்
சாந்தப்படை வேட்டுவனும் புன்னாடி வேட்டுவனும்
மளம்ப வேட்டுவனும் மாந்தப்படை வேட்டுவனும்
மோக்காளி வேட்டுவனும் வாகை வேட்டுவனும் 128

மின்ன வேட்டுவனும் கரைய வேட்டுவனும்
வேம்ப வேட்டுவனும்
பொன்ன வேட்டுவனும் பதர வேட்டுவனும்
பூத வேட்டுவனும்
மன்னர் புகழ் காட்டு வேட்டுவனும்
வளரும் அரிச்சந்திர வேட்டுவனும்
வன்னி வேட்டுவனும் கொடும்ப வேட்டுவனும்
மந்திரி வேட்டுவனும் 129

பரட்டை வேட்டுவனும் சலங்கை வேட்டுவனும்
பண்ணை வேட்டுவனும்
சுறட்டை வேட்டுவனும் பட்டாலி வேட்டுவனும்
தும்பை வேட்டுவனும்
தொரட்டி வேட்டுவனும் மணிய வேட்டுவனும்
சுண்டை வேட்டுவனும் 130

கொல்லி வேட்டுவனும் பாண்டி வேட்டுவனும்
குருகுல வேட்டுவனும்
வில்லி வேட்டுவனும் வேங்கை வேட்டுவனும்
இலங்கை வேட்டுவனும்
கல்ல வேட்டுவனும் கட்டாரி வேட்டுவனும்
காடை வேட்டுவனும்
வில்ல வேட்டுவனும் தூங்க வேட்டுவனும்
புல்ல வேட்டுவனும் 131

செய்ய வேட்டுவனும் வேதாரி வேட்டுவனும்
சிறக்கும் கற்பூர வேட்டுவனும்
பைய்ய வேட்டுவனும் பனைய வேட்டுவனும்
பறவை வேட்டுவனும்
தொய்ய வேட்டுவனும் சேதாரி வேட்டுவனும்
தூரை வேட்டுவனும்
மொய்ய வேட்டுவனும் சரக்கு வேட்டுவனும்
மோளை வேட்டுவனும் 132

நீதிக் கரும்புனித வேட்டுவனும்
நிலைத்த பரிப்படை வேட்டுவனும்
சோதிக் கரிப்படை வேட்டுவனும்
தொல்லை உரிமைப்படை வேட்டுவனும்
கோதில் கொழுகத்தாழி வேட்டுவனும்
கூறும் சிறுத்தலை வேட்டுவனும்
நாத வேட்டுவனும் பிச்ச வேட்டுவனும்
நரம்ப வேட்டுவனும் 133

வெள்ளை வேட்டுவனும் கதிப்ப வேட்டுவனும்
மயில வேட்டுவனும்
பள்ள வேட்டுவனும் குளுவ வேட்டுவனும்
பத்திர வேட்டுவனும்
கொள்ளை வேட்டுவனும் விதரி வேட்டுவனும்
குறங்க வேட்டுவனும்
கள்ளை வேட்டுவனும் குன்னாடி வேட்டுவனும்
களிப்ப வேட்டுவனும் 134

வாழும் கருங்கண் வேட்டுவனும்
வண்மைக் கொடும்புலி வேட்டுவனும்
சூழுங் கரந்தை வேட்டுவனும்
சோதிதிகழ் பம்பை வேட்டுவனும்
நீழும் கூரம்ப வேட்டுவனும்
நின்ற செங்கண்ண வேட்டுவனும்
மீளும் சர்க்கரை வேட்டுவனும்
வெண்மைப் பேரிஞ்ச வேட்டுவனும் 135

கூறும் இந்திர வேட்டுவனும்
கூடும் கோமாளி வேட்டுவனும்
சேரும் பொன்னுளிய வேட்டுவனும்
சீறாறுமுக வேட்டுவனும்
பாருலாம் மலைய வேட்டுவனும்
வரிசைதெரி பருத்தி வேட்டுவனும்
ஓருங் கரடி வேட்டுவனும்
மதியுற்ற முக்கொன்றை வேட்டுவனும் 136


Scanned with OKEN Scanner

நீடும் மாடந்தை வேட்டுவனும்
நேயக் கௌதாரி வேட்டுவனும்
தேடும்புகழ் பால வேட்டுவனும்
செயங்கொள் பூச்சந்தி வேட்டுவனும்
நாடும் கூச்சந்தி வேட்டுவனும்
நன்மை நற்சுழி வேட்டுவனும்
கூடும் பூவாணி வேட்டுவனும்
குறழ்ந்த பெயர வேட்டுவனும் 137

நாரி வேட்டுவனும் கடம்ப வேட்டுவனும்
நரிய வேட்டுவனும்
வீர வேட்டுவனும் பலகை வேட்டுவனும்
சொட்டை வேட்டுவனும்
காரை வேட்டுவனும் தூண்டி வேட்டுவனும்
கலக்க வேட்டுவனும்
காரி வேட்டுவனும் பிரம்ப வேட்டுவனும்
கவுண்டி வேட்டுவனும் 138

பூழை வேட்டுவனும் கோமுக வேட்டுவனும்
புட்ப வேட்டுவனும்
ஊழை வேட்டுவனும் பூனுவ வேட்டுவனும்
உம்பி வேட்டுவனும்
காழைய வேட்டுவனும் மும்முடி வேட்டுவனும்
குரும்ப வேட்டுவனும்
மாழை வேட்டுவனும் வெங்கச்சி வேட்டுவனும்
மன்னும் கதுகால வேட்டுவனும் 139

ஆமை வேட்டுவனும் கோதண்ட வேட்டுவனும்
மாந்தை வேட்டுவனும்
ஏம மாச்சாடி வேட்டுவனும்
இலங்கும் சர்க்காரி வேட்டுவனும்
தீமையகல் திட்ட வேட்டுவனும்
செழுமை பாலை வேட்டுவனும்
வாமப் பெருந்தலை வேட்டுவனும்
மண்டலமேவு சிலை வேட்டுவனும் 140

நக்க வேட்டுவர் கீரந்தை வேட்டுவர்
நாரை வேட்டுவர்
தூர்க்கை வேட்டுவர் மினுக்க வேட்டுவர்
சுள்ளி வேட்டுவர்
நிற்கும் கோமாளி வேட்டுவர்
நேசமுடன் கரடி வேட்டுவர்
சொக்கும் ஆனந்த வேட்டுவர்
தொல்லை உத்திர வேட்டுவர் 141

வேங்கை வேட்டுவனும் முழக்க வேட்டுவனும்
அமர வேட்டுவனும்
தூங்க மோலி வேட்டுவனும்
தாவும் அந்துவ வேட்டுவனும்
நீங்கா வெளிராசி வேட்டுவனும்
நிலை நட்சத்திர வேட்டுவனும்
தேங்கும் அக்கினி வேட்டுவனும்
திறமை வான்மீக வேட்டுவனும் 142

## மணமக்கள் காப்பு அணிதல்

துய்யும் வானில் மின்னல் இடியெனத்
திமிலை முரசு துந்துபி முழங்க
உய்யும் கவிவாணர் மறையோர்களும்
உலகில் அடைந்திட்ட இரப்போர்க்கும்
பெய்யும் முகில்போல் கனகம் நல்கிப்
பெருகும் சுவையுடன் அமுதளித்து
வய்யந் தருமாலை சிகையுரத்தில் அணிந்தனர்
காப்பும் அங்கையில் தரித்தார் 143

## ஓடையம்பதி செல்லல்

தரித்தும் உவந்தும் மற்றும் இளைஞர்
அனைவரும் ஓடையம் பதிக்கு
கருத்தில் வழுவாமல் எழுக என்னவே
கோலக் கடவுளர் முடியணிமேல்
திருச்சந்தி இயங்கப் பொன்பீலி கொண்டு
ஜேஸ்டரும் பாணரும் இலங்கிவர
உருத்தும் மன்றல் ஆற்றற்கு எனவே
உற்றதேர் குதிரையும் முன்செலவே 144

இருந்த துங்க மாரேந்திரன்
எல்லாத் துரைகளும் புறப்படென்றார்
திருந்து புகழ்சின்ன மாரய்யனும்
செவ்வேள் எனும்பிள்ளை மாரய்யனும
வருந்தும் தமிழ்சேர் உடையானும்
மன்னர் மன்னர் கற்பகத்தானும்
பொருந்தும் கருணை உத்தண்ட ராயன்
பூதத்தியும் பெற்ற புதல்வர்களும் 145

மாதின் விளங்கும் பட்டாலிகுல
மன்னர் ராக்கன் மகிபதியும்
காதிவரும் சிங்கத் திரளத்தார்
காவல்காரர் கட்டியம் கூற
வாதித்தமிழ்ச் சிங்கப் புலவோரும்
வணங்கும் பனிரெண்டு தொழிலோரும்
சோதிதரும் செம்பொற் சிவிகையின்மேல்
துன்னும் எழுபது துரைமக்களும் 146

வாளரச மணவாளர் எழுபது பேர்
மறையோர் குருபோதர் முதியோரும்
நாலும் பணைக்கைச் சிந்துரத் திரளும்
நனவிற் கடியவெம் பரிப்படையும்
ஆலமெனச் தெவ்வர் தனையடர்த்தும்
அரிய விருதிட்ட வீரர்களும் 147

நீலக் கயல்விழி மடந்தையரும்
நிறைந்த சாமரம் இடக்கையரும்
கோலக் குடையும் சந்திர வட்டம்
குளிர்செங் காவிப் பாவாடைகளும்
காலக் கனநிழல் பரிசைகளும்
கனக மணிதுன்னும் சிவிகைகளும்
சாலத் திருக்கற்பு மாதராரும்
சகல பேர்களும் திரண்டெழுந்தார் 148

சகல பேரையும் நடக்கச்சொல்லி
தந்திரப் பரியில் தண்டிகைமேலும்
மகிழ மதிப்ப வேயிருந்து
மெத்த ஆரவாரமாய் நடந்துசெல்ல
முகிலன் இடையிடை சோதிமின்ன
முன்னும்பின்னும் லட்சம் எழுந்தாற்போல்
புகலும் புகழ்சேர் மாரய்யனும்
மிக்கபுத் திரருடன்மத கரியில் வந்தார் 149

## திருச்செங்கோட்டுக்குக் கொடை தந்து வணங்கல்

நாக மாமணி வயங்கும் நளின மண்டபத் திலங்க
வேகமாய் மருகில் எங்கும் இலங்குறு சுடரு மின்ன
கோக னங்கள் சேர்ந்து கொன்றை செண்பக முற்று
நாகம்பொற் சிகரிப் புங்கம் நவமணி யாலே வைகும் 150

அல்லிசெங் கழுநீர் சாலி அணுகிய தடாகம் வாவி
வல்லபொற் குமரி கங்கை வழுவைமா முகவன் கங்கை
மல்லிகை தோய்ந்த காவில் வளருமே யுறுகும் குன்றின்
வில்லி பாகம் பிரியாத விமலியார்ந் திலங்கும் கோதை 151

ரத்தினத் தாலே கிளர்ந்தியங்க நெடிய மெய்த்தூண் நிறுவி
நிற்ற பசும்பொன் சுடர்வேய்ந்த நிரப்ப செய்மணி தொகைதுடக்கி
பற்றும் செழுமை வச்சிரபாணம் மேற்செல பணிதிக் கொடிக்கம்பம்
சுற்றும் தெள்ளிய மேடைமதில் பொருந்தும் கோயிலின் வாயில்களும் 152

அர்த்தனா ரீசர்உயர் குவட்டிலுள்ள
ஆண்ட லைக்கொடிக் குகனிட
சத்தம் இயம்பிய சேகண்டியும்
தாரை பேரிகை சல்லரியும்
நித்தம் கறங்கிடத் தெருத்தோறும்
நிலமை ரதங்கள் நடப்பதுவும்
முத்தி தரும்கோதைப் பதியினில்
முறைமை செழிப்புடைத் துறுநாளில் 153

வந்து கோதையம் பதிதனிலே
மன்றல் தொழுதியர் சூர்ந்திழிந்து
மந்திரம் அனைய கற்பகத்தானையும்
வாய்த்த புகழ்சிங்கக் கவியனையும்
சிந்தை தளர்வற நோக்கிமிகச்
செய்ய மாரேந்திரன் புகல்வான்
அந்த மிசைகார்த்தி கேயனுக்கும்
தழைத்த அர்த்தனா ரீசர்க்கும் 154

உள்ளக் கருணைக் களிரங்கமே
உற்ற அபிடேகம் சூட்டுதற்கு
விள்ளுதற் கரிதான பெருந்தசும்பில்
பெருகிய மனசுக் கொடைப்பணம்
வள்ளற் கினிய வியப்புறும் அரம்பை
மதுர கதலிக்கோர் ஆயிரம்பொன்
உள்ள பணமும் அததிகட்கு
ஒண்மை துடவ்வோர் ஆயிரம்பொன் 155

தண்பாடகமும் மிருகமந் தாரம்
இவற்றினுக்கு இருநூறுபொன்
கண்பராவிய ஈசன் புரிந்து
விளைந்த பால்ச்சென்னெல் அரியதும்
நண்போ டாயிரம் பொதிதமக்கு
நன்மை முயல ஐயாயிரம்பொன்
பண்பு லாவிய நிதியனைத்தும்
பழுதுறாமல் சென்றே வழங்கென்றான் 156

பீதகமும் விரையும் கமழச்சென்று
இவை முற்றும் வழங்கியபின்
ஆதி யனைத்தையும் விலகாமல்
சாந்து முறைந்திடென் றவர்களும்
சோதி உரகம் பொற்கிரி மீதில்
அதிசூழ்வர வியந்திரங்கி
மேதையுயர் நறை யறுகிநன்றாய்
வேண்டித் தொழுதுமற் றூர்நடந்தார் 157

சித்தசனை நிகரும்எழில் தோய்ந்தேகிச் சிறுகண்
குஞ்சர முகவன் சுத்த உதகத்தில் மூழ்கி
மற்றும் தும்பை முடி வள்ளற்கு
அபிடேகம் மெத்த இயற்றி
பொற்றாள் இறைஞ்சி வெறுக்கைப்
படிவாசல் கடந்து பின்னர்
மொய்த்த சிகண்டி மண்டபத் தருகே
முன்பு திரண்டு நின்றேத்தி முன்னி 158

வலம்வந்து எழில் சந்திர சேகரனுக்கும்
அபிடேகம் செய்து வழுத்தியன்றே
அலகிலா முடி தாழ்ந்திறைஞ்சி
ஆதிபொற் பொடியணிந்துகொண்டு
பலபல கலையுணர் புலவனுக்கு
அபிடேகம் செய்து பரிவுறுசீர்
இலகு பாக்கு வெற்றிலைப் பொடியும்
மற்றும் வழங்கின்றி யாவர்களும் 159

தேவர் குழுவனைத்தும் துதித்து
சித்தன்கழல் தெரிசனை தொழுது
சேவற் கொடிக்கு இளையவன்முன்னோன்
செங்வேள் சிகரியும் சென்றுவந்து
பூவிலுயர் கிரணம்திகழ் பொன்உரகப்
பொருப்பு விட்டிழிந்து பின்னர்
யாவரும் பணியும் கருணையிசைந்த
கயிலாசர் பதம்தொழுது 160

சருவிதான சனங்கள் அருந்தியபின்
வண்மை மாரய்யன் மகிழ்புரிந்து
மருவும் வெற்றிலை பாக்குவழங்கி
வைகும் கடிகையில் உமைகொழுநன்
அருவமுற எய்தி நீயியங்கு பகரும்
எமைப்போல் வருணமுயங்கி இருமெனவும்
பொருனன் களித்து ஓடையம் பதிக்கு
எழும் என்றனன் 161




Scanned with OKEN Scanner

ஐந்து மன்னரும் மந்திரி மார்களும்
அன்புறும் திரள் அனைவரும்
கந்தம் உலவும் வந்தஇரு சமயம்
பெரும்கன நிருபரும்
தந்திரங்கள் திரண்டெழுந்து
சுரும்பசுந்தன் குன்றுபோல்
சுந்தரங்கள் கிளர்ந்த தண்டளி
துன்றிடும்படி நின்றனர் 162

சிவிகை மீதினில் ஏறியேயிவர்
தேசம் மேவிய ராசரும்
கவிகை மாவினில் ஏறியேபல
தலைவர் சூழவும் வலுமையாய்
குவவ மாயுயர் திருவ மீதினில்
ஏறியே அணி சுவடியே
தவழு லாவிய தேவர் போல்வழி
சாடியே வழியேகினார் 163

செந்து மலர்மங்கை நகரகன்று
குரிசில் அனைவரும் செறிந்துரமாய்
சந்தம்திகழ் மாரேந்திர நிருபனோடு
இளிவற்றுத் தானை முன்னும்
விந்தைப் படியின் சார்பினிலே
செழுமை விளைவுபொன் றாமலுமே
கந்தம் பொலிதரும் மதுவுயர்போது
கந்துவளர் தருக்க வனத்திலே 164

செல்லும் பகலில் சண்டன் திசையில்
வெகுண்டு உழுவைகள் திரண்டெழுந்து
செல்ல மாகதன் திசையருகே மன்னர்
செறிந்துங் குறுக்கிக் கொண்டு
பல்லவம் சிறக்கவும் வயமாத்
தொகுதி யாவையும் வடுப்படுத்தி
வல்லபசு உடற்றிய பின்னரே
வழியில் வழுவாமல் ஏகினரே 165

பைந்தமனி யத்தின் சுடர்இரவி
பவுஞ் சனேகம் எழுந்ததுபோல்
கந்தர மகராங் கவுமிடந்து
கன்பணா உரகன் தியங்க
நந்து துடிதிண்டி பாலி சின்னம்
மாமலை கோடி மிகமலைந்து
முந்த ஒலித்த ஓடைநகர்
அடுத்துமுன் வந்தார் தூரியம் முழங்க 166

முழங்கும் திசையைத்தம் செவியுற்று
முறியாக் குருகுல முடிவேந்தர்
வழங்கு முகில்செங்கை உயரகுல
மாரேந்திரன் தனக்கு எதிராக
செழுங்குங் குமத்தொங்கல் அலுங்கச் செம்பொற்
திகிரிக் குடை மொய்ப்பச் செகராசர்
பளிங்கின் கிரியும்செம் பொன்னின் கிரியும்
பவளக் கிரியும்போல் எதிரில் சென்றார் 167

## ஓடையம்பதியில் வரவேற்பு

சேர இருவரும் விராவிக்கொண்டு
செம்பொற் புயத்தின்செம் புயம்சேர
மேரு இனம்ஒத்து நடந்தாற்போல்
விளங்கும் புகழ்ஓடையம் பதியில் வந்து
சேரும் பரிமா ஆனைகட்கும்
சேனை யாவர்க்கும் விடுதிவிட்டு
தாரும் விளங்கும் உயரகுலர்
தம்மை மனையில் நிற்கையிலோடே 168

அழைத்துக் கொடுசெம்பொன் மாளிகையில்
அலங்கல் மணிமெத் தையில் இருத்தி
குழைத்த அகிலும் சந்தனம் புழுகும்
குழம்பு மாரேந்திரன் தமக்களித்து
முழுத்தம் பிசகாமல் பரன் அருளால்
முந்தி வதுவையை முடிப்பதற்கு
தழைத்த புகழோடைக் குருகுலத்தார்
சகல பேர்களும் எழுந்திருந்தார் 169

வந்த பணிமதிக் கிரணங்களும்
மன்னர் மணிமுடிக் கிரணங்களும்
முந்த மகமேரும் தோரணமும்
முகில்மட் டளாவிய நிலைத்தேரும்
சுந்த மிகுந்த மாளிகைமாடம்
கனகக் கோபுரமும் பொன்முகப்பும்
இந்த ஊருக்கு எவ்வூரும் இந்திரன்
ஊரும் இதற்குஇணை இல்லையென்றே 170

## திருமணச் சடங்கு

கூறும் மொழிக்குப் பிள்ளன் எழுந்திருந்து
குமரர்தமைக் கையோடு அழைத்துக்கொண்டு
வீறு பெருங்கற்பு மடந்தையர்கள்
விளங்கும் மணப்பந்தல் நடுவிருத்தி
தேறும் குமரர் எழுபதுக்கும்
செல்வம் எழுபது பெண்கொடிக்கும்
மீறு தனுக்காமன் மரபினுக்கும்
யேது சாஸ்திரம் பலவும் செய்தார் 171

மாரன் வருடம் ரிஷபத்திங்கள்
ஒன்பான் தேதி மதிநாளில்
வேற தாகவே அதிகண்ட
நாம யோகம் புனர்பூசம்
சாரும்சே லக்கினத் திரிதிகை யோகம்
தைலவாகரண யோகம்
சுவர உயர கமலம் குவிதல்
அகற்றும் கொழுஞ்சுடர்த் திரிகன்னலில் 172

பிரமன் அரசையும் வலத்தில் சுற்றி
பெரியோர் மறையோர் மங்கலம் உரைப்ப
பரமன் அருளாலே பதினாறுபொன்
பரங்குமர லட்சுமியோல்
திருவும் வதுவையின் குமரர்களும்
சேர்ந்து வாழெனக் கரங்கவட்டி 173

மாலும் விளங்க லட்சுமி விளங்க
மன்னர் விளங்க வற்றாத மழை
நாலும் விளங்க இந்திரன் விளங்க
நல்ல மணவாள ருடன்மடவார்
தாலி விளங்கச் செண்டிகை விளங்க
தரணி விளங்கத் தண்டமிழ் விளங்க
சீல மிகுசிவன் பேர் விளங்கச்
செல்வக் கலியாணம் முடித்தார்கள் 174

## விருந்தளித்தல்

வற்றா வதுவையை முடிக்கும் அன்றே
வாழும் திருஓடைக் குருகுலத்தார்
உற்றார் உறவோர் தம்இனத்தில்
உள்ள உண்மையர்க்கும் உயர்கீர்த்தி
பெற்றார் பெரிய மாரய்யன்மார்க்கும
பெருமையுடன் வந்த பேர்களுக்கும்
சற்றா கிலும்ஒன்று குறையாமல்
சகல பதார்த்த அமுதுசெய்தார் 175

பரிதி இளஞ்சுடர் உறுபோது
பலமண்டலிகரும் பெரியோரும்
பொருதிக் கெசமென இருவோரும்
பொங்கும் கடல்போல் புகழோங்க
இருதிக் கிலும்புலிக் கொடியிலங்க
எண்ணவொண்ணாத பல்லியம் முழங்க
கருதும் பெரிய மாரய்யன் தொடுத்த
கருமம் செயங்கொண்டு களித்திருப்ப 176

ஏடவிழ் அலங்கல் வாகை
இருபுயன் வாழவந்தி
நாடகம் விளங்க வந்த
நளினமா ரேந்திர ராசன்
சூடகக் கரமின் னாட்கும்
சுதருக்கும் வதுவை செய்து
ஆடகக் கிரியன் போல
இருந்தனன் கொலுவில் அம்மா! 17




Scanned with OKEN Scanner

## பூவாணி குல ராசன்
### வெண்பா

வருமுயர கோத்திரற்கு வாழோடைப் பள்ளிக்
குருகுலர்பெண் டீய்ந்ததுவும் கூறிப் - பெருகுபுகழ்
நாட்டான்பூ வாணிகுல ராசன் அவனுடைய
தாட்டாண்மை சொல்வதினித் தான் 178

உண்மை யறுகாத நேயமிக்க
உற்ற தாரமங்கை யின்புரத்தில்
வண்மை பொருந்தது மேபிறங்கு
வண்மைக் கயிலாச நாதர்செயல்
திண்மைக் களவின்மெய் வரம்சிறந்த
சகல சனங்களும் சிறப்ப
ஒண்மை நெறிமுறை பிசகாமல்
உதித்து வளர்ந்தென்றும் மாசறவே 179

இலகும் ஊர்தோறும் பொன்மேடையும்
இதம்சேர் மாட மாளிகையும்
நிலவு மணவின் மண்டபம் சிதரி
ஞெள்ளல் மிகுந்த பைங்காவும் செறி
தலைமைப் பூவாணி நாட்டினிலே
உகந்து சவுக்கிய மேதழைத்து
அலகை யகற்றும் பொன்னிநதி
அருகே மேவும் ஆவணி வேலூரில் 180

பூவாணி குலன்அதிக பூவாணி நாடன்
பொங்குபுகழ் மாகுணி இங்கிதமென
நாவாணர் புகழ்ந்துவரும் வாளரச மணவாளர்
நரலோக கண்டன் ஒட்டியர்கள் காலன்
தேவராம் மலையரனுக்கு எச்சிலிட்டோன்
சிவன் மகிழஅன்று சிவராத்திரி கண்டோன்
மேவார்கள் அரிபோ தரிசேகர கவிராசன்
வீறான நவரத்தின சிங்கா சனக்கோன் 181

வங்களர் தெலுங்கர் குச்சரர் துளுவர்
ஈழர் மராட்டர்கள் கன்னடர் மண்டலிகர்
சிங்களர் துலுக்கர் ஒட்டியர் மறவர் சாளுவர்
திரண்டடி பணிந்த செங்கனக நவரத்தின
பொங்கு மதகரி பரிதிறை அட்ட விஞ்சையர்கள்
புகழ்ந்து கவிபாட மடமாதர் நடமிட
துங்க ரணவேள் போத்திசேர் கவிராசன்
சூர சூராந்தகன் எனக் கொலுவீற்றிருந்தான் 182

சேனையங் கடல்கள் சூழ
திக்கெலாம் விசயம் கொண்டு
வானையும் கடந்த கீர்த்தி
மகாகண்ணன் போத்தி ராயன்
தானையும் கடவுள் மூவர்
தம்மையும் சகல சீவ
னூனையும் சிவன்சூர் என்று
கொற்றவன் இருக்கும் நாளில் 183

காலத்தைத் தோலைச் சிறந்தெழு தன்மையாய்
ஞாலத்தோர் புகழ் நலம்புகழ் கொங்கினில்
சாலச்சீர் மச்சிமம் செறி தரவுரை
ஆலத்தூர் முல்லை அரணி யத்திலே 184

## பூவாணி நாட்டார் - பூந்துறை நாட்டார் போர்

நலம்செறிந்த பூவாணி நாட்டார்க்கும் நாடோறும்
பிலம்செறிந்த பூந்துறைசை நாட்டார்க்கும் பெரும்பகையாய்
தலம்செறிந்த எல்லைவனம் தன்னில்இருவரும் தான்பொருதி
அலைந்திறந்து பூந்துறைநாட்டார் அணியது முறிந்ததுவே 185

கொள்ளை கொண்டு போனதையும்
கொணர்ந்து பிணம் கிடப்பதையும்
வள்ளல்எனும் பூந்துறை நாட்டார்
மீள வந்து நின்று
உள்ள மெல்லாம் கொதித்து
திருவோடினதுக்கு உள்ளுடைந்து
விள்ளவும்வாய் அற்றரசர் 186
விதிமாண்டு நின்றனரே


Scanned with OKEN Scanner

நின்ற காளையர் சிலர்திரண்டு
நீர்மையாம் தெளிந்து உரைபயில்
ஒன்றியே அவர்களில் ஒருவன் புகல்வான்
ஒடையம் பதியிலின்றே
துன்னும் சமர்க்கு முன்னம்
கலங்கா மாரேந்திரன் சோபனம் செய்குவார்
என்று விளம்ப உள்ளுறுதி நண்ணி
தூதர் தமைநோக்கி இயம்ப லுற்றான் 187

## பூந்துறை நாட்டார் பெரிய மாரய்யனுக்கு ஒலை அனுப்புதல்

மன்னர் உயர குலேந்திரர்கள்
மருவும்புகழ் பிள்ளைக்கரை யாற்றூரிலே
தன்னிலிருந்து நம் ஒடையம்பள்ளி தன்னிலே
கலியாணம் முடிக்கின்றார்கள்
முன்னம் அவர் ஊருக்கு ஏகும் முன்னரே
எம் ஓலையும் கொண்டு நீயும் சென்று
அன்னை பெரிய மாரய்யனுக்கு
அபயம் எனச்சொல்லியே வணங்கி 188

சரணம்தான் செய்து தாழ்ந்து நின்று
இவ்விடம் தனில்கண்ட சரித்திரத்தை
கரமும் குவித்து முன் விளம்புதி என்று
கையால் மடல்பொறித்து
பெருகும் மடலினில் துகளியற்றிப்
பேணிச் சுவணத்தினைத் திரையும் கட்டி
கருதி மறவாமல் கையில் கொடுத்து
காதி யேகென அனுப்பியபின் 189

## தூதர் வரல்

நடந்து வழியெல்லாம் துலைந்து முன்னோர்
நாடும் ஒடையம் பள்ளியடைந்து
கடந்த புகழரசர் கவிராசர் புவிராசர்கள்
தொழ மாரேந்திரன்
இடம்தங்கிய சிங்காதனம் தன்னிலே
இருக்கும் சமயத்தில் தூதர்சென்று
மிடைந்த வறிஞர் செல்வர்கள் பதத்தை
இறைஞ்சி விழுகின்றபடி போலே 190

கையில் பிடித்திட்ட பசுங்குழையும்
கருதார் கணைதைத்த காயங்களும்
மெய்யில் திகழ் ரத்தத் துகிலும்
பொற்றாள் மீது முகத்திலும் படுதுக்கமும்
செய்ய பெரியோர்கள் விழிகாண
செம்பொற் பாதநேர்மை வீழ்ந்திறைஞ்சி
பெய்யுமுகில் "செங்கை மாரேந்திரன்
பிள்ளைகள் நாங்கள்" என்று அழுதுநின்றார் 191

இரத்தம் ஏது கைத்தழை ஏது விளங்கும்
பசும்பொன்னின் திறையேது
முத்துத் தொடைப்புய வடுஏது முகம்
சம்பியது ஏது சலிப்பு ஏது
சுத்தக் கடையோலைச் சுருல்ஏது
சூழ்ந்த பகை ஏது உரை அவன்யார்
கொத்துப்பட என்முன் சொல்லும் என்ன
கோமான் பெரிய மாரய்யன் உரைத்தான் 192

செய்ய பூந்துறை நாட்டார்
தென்பூவாணி நாட்டாருடன் பொருதி
வெய்ய சமர்கெட்டு முறிந்தோடி
வீணே அநேகம் சேவகர்பட்டார்
உய்யும் வகையினிக் காண்பதற்கு
உங்கள் பாதமே கெதியதென்ன
அய்யன் பெரிய மாரேந்திரன் தனக்கு 193
அபயமெனச் சொல்லி எனைவிடுத்தார்

யானும் அதனால் வந்தேனய்யா
எனச்சொல்லி அகல நின்றான்
ஈனம் இதனால் வரலாமோ
யாமும் மலைபோல் இருக்கையிலே
மீன மதனைக் கண்ணால் எரித்த
விமலன்எனக் கோபம் வெகுண்டுடனே
சேனை யாவையும் புறப்பாடென்று 194
செங்கோல் பெரிய மாரய்யன் எழுந்தான்

## பூவாணி நாட்டாருடன் போரிடப் பெரிய மாரய்யன் புறப்படல்

எழுந்தபோது அதிர்ந்தெழுந்த தூளிகள்
இரவிக் கிரணத்தை மறைத்திடவே
செழுந் தந்தியைக் கொண்டுவரச் சொல்லி
செங்கோல் பெரிய மாரய்யன் இருந்தான்
தொழுந்தற் பரன்அருள் மறவாது
துணைவர் மக்களும் துரைகளுடன்
கொழுந்து கொளும்புகழ்க் குருகுலரும் 195
கூடப் பரிகரி மீதுகொண்டார்

மேளம் பலதிக்கும் முழங்கிடவே
வெம்போதகப் படையுடன் மாவும்
நீளம் பிறங்கிய வய்யம் என்ன
நின்ற சூரரும் புடைசூழ
காளம் பயிரைகனுடல் நெளிப்பக்
கருதார் இதயமும் பறையடிப்ப
வாளம் பெயர்விந்தம் நடந்ததென்ன
மாரேந்திரன் சேனை நடந்ததுவே 196

பெயர இடமற்றுத் தானையெல்லாம்
பின்னும் முன்னும் அணி நெருங்கிச் சென்று
அயரும் சுடரீட்டி விசயமன்னை
அளக்கும் கோலென்ன அளியவுடல்
தயிரான சூரர் நெடும்கொடிகள்
சகல திசையெங்கும் பரந்துதுணர்
வயிர வலிநெஞ்சன் மாரேந்திரன்
வயங்கும் படைவீட்டைக் குறுகினனே 197

காப்பறு வரையும் கதித்தவனம்
தோறும் துன்றியும் அரசர்
காப்பறாமலும் இருந்தா லென்ன
என்று கடிந்துகொண்டு அனைவோரும்
பூப்புயர் சகலாகலர் மறக்குல
அவரவர் பொருதி நின்று
வாய்ப்பதாய்ப் போத்தி மன்னன் மள்ளரைப்
பூசலுடற்றிடுவோம் வாரும் என்ன 198

வடவையெனக் கொதித்தெழுந்தான்
மழையில் லாமல் பட்டுளவுலர்ந்த
அடவிதனில் பற்றும் படிபோல
அருள்இல் கடுங்கோபம் மிகுந்தெரிக
கொடியமுனை மீசை துடித்திடவும்
கோபக் கருங்கண்கள் சிவந்திடவும்
சுடும் வெதும்பப் பொன்முகம் வெயர்க்கத்
தானையுடைப் போத்திராசன் 199

கடிய சினவேங்கைக்கு எதிராகக்
காட்டில் திரிமானும் கலைமானும்
படியும் கொடியாடும் முயல்தானும்
பகைகொண் டெதிர்க்குமோ பரந்த விண்ணில்
இடியும் கடுங்கோல மயிலும் ஒன்றி
எதிர்த்தால் பணியெதிர் நிற்குமோ
தடிதான் கையில் கொண்ட பேர்கள் முன்பு
தரணி மீது மட்கலம் நிற்குமோ ? 200

வேழம் படைசேர் ஒட்டியனும் அல்ல
வீறு பரிப்படைத் துலுக்கர் அல்ல
வாளில் பொரும் நரபதியும் அல்ல
அமரில் உடைந்த பூந்துறை நாட்டார்
வாளப் படையெடுத்து உதவிவந்த
மாரேந்திரன் என்னும் உயரகுல
ஏழைப்பல புத்தியவன் இதயத்து
இருந்த வகைதன்னை ஏதுசொல்வேன் 201

## பெரியமாரய்யன் படைச்சிறப்பு

சீறும் சினச்சிங்கம் போலிருந்து
திரும்பித் தூதரை அருகழைத்து
மீறும் சிலதில் உயர குல
இராசன் படைத்திரள் இம்மட் டென்றே
கூறும் சொலுமென இனிக்கேளும்
குலவும் கதிர்மணிச் சிவிகையின் மேல்
ஏறும் சினமன்னர் அளவுமில்லை
இருந்த முடிமன்னர் இலக்க மில்லை 202

வென்றி வீரர்கள் இலக்கமில்லை
மேகம் போலவே வெகுண்டேறி
நின்ற துரகம் இலக்கமில்லை
நேரே எழுபது குமாரருடன்
ஒன்றி யெழுபது துரைமக்கள்
உறவு மினங்களும் இலக்கமில்லை
மன்று தனில்உள்ள மலையெண்ணினும் 203
மதயானையை எண்ணக் கூடாதே




Scanned with OKEN Scanner

வதுவை யுடைத்தான எழுபதுபேர்
மக்கள் துணைவர் ஐந்தரசின்ப
அதியானை ஆண்ட அரசமக்கள்
ஆன பட்டாலிக் குலராக்கன்
சதுரத் தமிழ்ச் சிங்கக் கவிராசன்
சாதி தொண்ணூற் றெட்டெனச் சூழ்
விதுரன் எனும்சிலை மாரேந்திரன் 204
வேந்தர் நடுவில்நின்ற எழில் கேண்மின்

ஆதி காலத்தில் முடிபுனைந்த
அன்னாள் நிழற்றிய மணிக்குடையும்
சோதி திகழ்காதில் சவுக்களியும்
துலங்க ஆலவட்டம் மிரட்ட
மீது புலிக்கொடி அசையக்கம்பம்
விளங்கும் அகில்புகை முகில்பரப்ப 205
நீதி மதயானைப் பிடர்தனிலே
நிபுண மாரேந்திரன் இருந்தான்காண்

ஏந்தலே என்று தூதன்சொல்லி
எழும்பிள்ளாய் படை யெழும்என்னவே
சேர்ந்த புகழ்ச்சிங்கர் சனத்தைவிட்டு
சீறிச் சினம்பொங்கி யிறங்குமுன்னே
சாந்த குணமன்னர் சிலபேர்கள்
சடக்கென் றெழுந்து போத்திமாரயன் 206
காந்தள் கரம்சரண் தழுவிக்கொண்டு
கருணை யுடன்எம்மை அனுப்புமென்றார்

பல்லியமும் உடன் கூட்டிப்
பரிசை வில்வாள் பருதியுடன்
கல்லெறியும் கவண்குலிசம்
கதையுடனே முப்பிடியும்
எல்லையில்லா வீரர்கொண்டு 207
இருமருங்கும் புடைநெருங்க
நல்லதென்னப் போத்திமன்னன்
அன்புடனே விடைகொடுத்தான்

## பொத்தி மன்னன் படை

சுடர் விரி கிரண வேலும்
துன்றிடத் தொல்லைஞானம்
படர்திசை யடங்கல் முந்தும்
பலபதாதி களும் சூழ
திடமிகு போத்திமன்னன்
சேவடி வணங்கும் வீரர்
அடல்புரி ஆலத் தூரின்
அடவியில் வந்த தம்மா 208

காவிலும் மலைகள் தோறும்
கங்கையின் கரைகள் தோறும்
தாவிய முரசு கைமாத்
தானையும் சூரர் வீரி
மேவிய இயற்கை தன்னை
வேள்எனும் பெரிய மாரன்
சேவகம் கண்டு ரோமம்
திருமெய்யும் புகையு முற்றான் 209

பொத்தி சேகரன் பவிஞ்சு வந்து
பொருத எல்லையின் புரந்தனிலே
மெத்த ரணசிங்க மென வாரார்
மெய்யய்யா என்று பணிந்து நின்றார்
சுத்த ரணசூர மாரேந்திரன்
துணுக்கென் றெழுந்துதம் படைதன்னையே
மெத்த அணியாக வகுப்பச் சொல்லி
வேந்தர் அனைவர்க்கும் விடைகொடுத்தார் 210

தம்பிமார் நான்கு பேர்களுக்கும்
தங்கள் எழுபது குமரருக்கும்
வம்புசெறி வாகை ராக்கனுக்கும்
வலிய எழுபதுதுரை மக்களுக்கும்
நம்பு குருகுலத் தவர்தமக்கும்
இரண்டு அரசர் மக்களுக்கும்
நன்றாய் அணிவகுப்ப இன்பமுடன் 211
மாரய்யன் அருளிச் செய்தனரே




Scanned with OKEN Scanner

சின்னம் கருங்கொம்பு உடுக்கை தப்பு
திமிலை முரசு திண்டிம முடனே
உன்னும் பெருஞ்சத்த முறமுழங்க
உயர்ந்த குடையும்பொன் னிடக்கயமும்
மின்னும் கிரணச் சந்திர வட்டமும்
விளங்கச் சகசம்புக் குடைநிழற்ற
துன்னி யரசர்பே ரணிசூழ
சுரந்த அணியைவெம் பகைவர் கண்டார் 212

கண்டார் அணிவகுத்தன லட்சம்
காலாள் தனைமுன் றணிவகுத்து
தண்டாயுதம் ஈட்டி பரிசைவில்வாள்
தரித்த சமர்சத்தி ராதிகளும்
உண்டாகிய சருவ பலத்துடனே
ஒருமித்து உலகெங்கும் திரண்டாற்போல்
அண்டர் எனும்படைத் தலைவர்எல்லாம்
அசையா மலைபோல் பேரணியில் நின்றார் 213

அண்ட பகிரண்டம் அதிர்ந்ததுபோல்
அசையா மணிமுரசு ஆர்ப்பரிக்க
கண்ட நவகண்டம் நடுநடுங்க
கரட மதயானைக் குரல்முழங்க
தண்டதரன் சூரர் திரண்டாற்போல்
சகலகலைப் போத்தி சேகரனாம்
மண்ட லேசுரன் படைத்தலைவர்
வாளித் திரளிட்டு மலிந்துநின்றார் 214

## போர் தொடங்கியது

நின்ற நிலையும் மண்டலிகர் நெஞ்சில்
நெருப்புற் றெழுகின்ற நினைவும் கண்டு
கன்றிப் பெரிய மாரய்யன் சேனை
காலாக் கினிபோல் கொதித்தெழுந்து
அன்று தசரதன் மதலை மண்ணாள்
அரக்கர் மேலே நடந்ததுபோல்
வென்றி யுடைய போத்தி சேகரன்தன்
வேந்தர்க்கு எதிராக விரைந்துசென்றார் 215

ஆல காலமோ யமன்தானோ
அலைவாரிதியை முன்னம் உட்டெடுத்த
ஞாலமோ என நினைந்து
போத்திராய சேகரன் ரணசூரர்
சூலங்கி வசுகன் னையந்திடுக
சுரிகை நெடும்படைத் தொகுதியுடன்
ஓலம் செறியும்கார் இடியும் என்ன
உருத்துற் றெழும்படி போர்புரிந்தார் 216

எறிந்த சுபரீட்டி புதைந்த புண்ணில்
எழுந்து சரிந்தோடும் குருதிவெள்ளம்
நிறைந்து தலமெங்கும் பரவிடவும்
நேரில் போத்தி வீரமன்னர்
தரிந்து தலையற்று விழுந்திடவும்
சற்றாகி லும்நிலை பெயராமல்
செறிந்தும் எதிரொக்க நடந்துவெம்பி
சென்றுமழைக் காலம்போல் கணைதொடுத்தார் 217

எதிர்த்துப் பெரிய மாரய்யன் சேனை
யானை அணிகளை முன்நடத்தி
மிதித்துச் சரம்தொட்டுக் கழுமுள்ளிட்டு
வேல்கொண்டு குத்தி அவர்கள்நெஞ்சில்
கொதித்துக் குருதி கொப்பளிக்க ஒன்னார்
குறங்கு தடமார்பும் துகைந்துளைய
வென்னிட்டார் போத்தி மன்னன்வீரர் 218

தொட்ட கணைபட்டு மாரேந்திரன்
துரக ராசியும் சூரர்களும்
பட்டு விழுந்தனர் யிளந்தார்த்தார்
பவுஞ்சு குலைந்திட்ட பரிவுகண்டு
துட்ட ரிடிபோத்தி சேகரன்தன்
துரைகள் ஒருமித்துத் துடர்ந்தடந்து
அட்ட திசையெங்கும் அதிர்ந்துவரும் 219
மதலை யெழுபது துரைகள்கண்டார்

கண்டவுடன் இகற்றளத் துறுமல்
அகற்றுவோம் என்று மனமொன்றி
சண்டம் பெருகி உள்ளூரக் கொதித்து
சாபம் குனித்துவெம் பகளியுறுத்த
மிண்டு திரற்கொடும் குலிசத்திலும்
வெய்ய குறும்பிடி திகிரியிலும்
கொண்டல் நிகர்போத்தி மன்னனிகம்
குறைத்தார் மணவாளர் கூர்அயிலால் 220

அலகை திரண்டது கழுகனந்தம்
ஆலித் தெழுந்தது அகண்டவிண்ணில்
விலகும் பருந்துகள் சிலகோடி
எழுந்து பறந்தது பேய்கள்லட்சம்
சலகை பறந்தது நரிகள்எங்கும்
தாவிப் பறந்தது சரசகுண
நலகுங் குமமார மாரேந்திர
ராயன் பொருதும் ரணகளத்தே 221

வெண்மூளைகளும் பிணமும்
தலையற்ற கவந்தங்களும்
பெரியகுரல் சற்று விழுந்துரப்ப
பிணமும் கரட குஞ்சரமருப்பும்
கண்ட திசையெல்லாம்
ரண களத்தே 222

உரத்துக் குரளியை யிருளன்கிட்டி
உதட்டை மடித்துச்சென் றுறக்கிக்கொள்ள
சிறக்கைக் கடித்துச் செம்பல பூதம்
தின்று நிமிர்ந்துநின் றாப்பரிக்க
கரத்தின் நிணக்குடல் தனைப்பிடிங்கி
கழுத்திற் சுற்றும் தொடையதுஎன்ன
திரித்துச் சிலபேய்கள் அலங்கரிக்கும்
தரும மாரய்யன் வாழியென்னும் 223

வாழி மாறன்கை வேல்வாழி
வலிய துணைவர்கைச் சிலைவாழி
வாழி எழுபது துரைகள்கைவாள்
வாழி எழுபது மணவாளர்
வாழி பட்டாலி குலராக்கன்
வாழிவாழி வல்லயம் வாழி
வாழி பூதத்தி மசரிபெற்ற
மகரண்டரச மக்களும் வாழி 224

இருந்தனர் பவுஞ்சி சூழ
இகல்படை வீடு தன்னில்
திருந்துதுடி முரசு கொட்ட
சல்லரி மிக முழங்க
பொருந்திறல் அரசர் கோமான்
புகழுடைப் பெரிய மாரன்
கரங்குதின் கரவெவ் வேழம்
கருதுமால் போல அம்மா 225

சினந்து பிடித்திட்ட வெறியின்கையில்
சிக்கி நழுவிய எலிபோலே
அனந்தன் புயங்கள் துடர்ந்த அன்னாள்
அகப்ப டாத மண்டுகமன்று
இனந்தங்களை விட்ட மான்போல்
இடைந்து வரும்படைத் தலைவர்கண்டார்
கனந்தங் கியபோத்தி சேகரன்தன் 226
கமல மலர்த்தாளைப் போற்றிநின்றார்

போத இருவரும் கிளர்ந்துநின்று
பொருதோம் பொருதிட்ட போர்தனிலே
வாதாம் வெகுண்டெழ அதனூடே
வைக்கல் போரில்வெங் கனலைவைத்த
நீதமென எங்கள் தனைவளைத்து
நெடிய வல்லயங் கேடயத் தாலே
மோத அடியோங் கவனியெல்லாம் 227
முறிந்தோம் தலைகெட்டு முறிந்தோமே



இப்படித் தூதர் அஞ்சி
இருகரம் கட்டி நின்று
செப்பிடு மொழியைக் கேட்டு
செயிருடைச் சிங்கம் போல்வான்
பொற்புடைப் புயங்கள் மீது
பூண்டவெண் தரள மாலை
கற்பட எழுந்து காயும்
கடுங்கதிர் ஒத்த தன்றே 228

கண்கனல் சிந்த நெஞ்சம்
கடும்பகை விளையக் காமர்
பண்கலந்து அளிகள் பாடும்
பரிமள மாலை தீய
விண்கன மதியம் போல
விளங்குசெம் முகம் வியர்ப்ப
வண்கழல் அரசர் போற்ற
வாளரி என இருந்தான் 229

வெற்றி மதகரி யேறி
விதிர்வுடை வாள்கை பிடித்து
பொற்றிகரிக் குடை நிழற்ற
புதியவெண் சாமரை வீச
மற்றுமுள சந்திர வட்டம்
வயங்கமணி முடி இலங்க
நற்றவம்சேர் கின்ற போற்றி
இராயன் இபம் நடத்தினனே 230

துந்துமி படக்கைபல தாளமது கொட்ட
தும்புர மெழுப்புமிசை யாழது முழங்க
பந்தியோடு அடற்புரவி யாடிமுன் நெருங்க
பந்தெழு மலைக்கு இணையதானை அண்ட
தெந்திசை யுடைத்தரும ளாறைநிக ரொத்த
திண்டிறல் உடைத்தசெக ராசர்கள் மொய்ப்ப
அந்தர விசும்பினிடைத் தூளது மறைக்க
அங்கையில் இருக்கும்சிலை வாள்தனை எடுத்தார் 231

## போற்றி மன்னன் போர் செய்ய வரல்

ஆனைப் பவிஞ்சு முன்நடக்க
அதன்பின் அரசர் அணிநடக்க
தானைத் துளுவர் சென்றிட அதன்பின்
சமர்முகவாசி அணிகள் செல்ல
சேனைத் தலைவரும் அமைச்சர்களும்
செம்பொன் சிலையின் திறல்நடுவே
வேணைப் போற்றி சேகரனும்
விரைவில் நடந்தவெங் கரிமீதே 232

குலிசம் தடிதண்டு கவண்கல்லினும்
கொடியவில் கம்பு கூர்வேலும்
வெலிசை சுரிகை கைவாளும்
பரிசைவெம் பீலித் தண்டும்
புலிசைநகர் ஈச ருடனே
பொலிந்தமுப் பிராதி கள்போல
சொலிகை யுள்ள போற்றி சேகரன்தன்
வயவர் பேரணித் தொகுதிசெல்ல 233

தாக்கும் சமர்க்களம் தனையடுத்து
தானையுடைப் போற்றி சேகரனை
நோக்க முறக்கண்ட தூதர்சென்று
நுவலும் படிக்குஉன் கருணையின்
வாக்கும் மனமும் பொய்யாதவெற்றி
மாரேந்திரன் வண்மைக் கோயில்வந்து
ஏக்கம் அணுகாது இறைஞ்சிநின்று
எந்தன் அரசேகேள் எனவேசொல்வார் 234

தரணி யாவரும் திரண்டதுவோ
தருணை எமலோகம் திரண்டதுவோ
இரணியனும் கம்சன் இருவருமாய்
எழுந்த தோவென இருண்டநெஞ்சம்
முரளநிகர் போற்றி சேகரனும்
முடிவில் அளவற்ற மன்னருடன்
அரணி வலியதோர் படைவீட்டில்
அருகில் வருகிறார் சதியல்ல 235


Scanned with OKEN Scanner

சொன்ன வசனம்தன் செவியோடு
சுட்ட நாராசம் சொருகிவிட்டது
என்னக் கடுங்கோபம் மிகப்பெருத்து
இருகண் அனல்பொங்க விரவிமிக
அன்னை கிரகநட் சத்திரமோ
ஐம்பொன் தனக்கீய மதுநிகரோ
என்னப் பொருத்தோ அனுவுமிப்ப
நேர்ந்த போதினில் பகர்திஎன்றான் 236

## மீண்டும் கடும் போர்

மெத்த வியாம அவன் தனைக்காணா
இடத்தில் திடஞ்சொன்னதால் பயன்என்ன
அத்தர் திருச்செங்கோட்டு அருளாளர்
அருவாகிய மேனி யான்காண
நித்தம் சிலபேய்கள் கண்டுகளிப்ப
நேரிலான் போற்றிமன் னன்முடிதான்
தத்திவிழ வெட்டித் தரையூடே
தாக்கிப் பொருவன்என்று ஆர்த்தெழுந்தான் 237

சின்ன மாரய்யன் இனியசெவ்வேள்
செங்கைமுகில் பிள்ளை மாரய்யனும்
மன்னரா திபன்எனும் உத்தண்ட
மண்ட லீகனும் மதன்ரதியால்
அன்ன மாதர்கள் புகழ்கின்ற
ஆவுடையானும் கற்பகத் தானும்
சொன்ன வாசகம் தவறாத
சூரன் பட்டாலி குலராக்கன் 238

கொன்றை மாலையும் மடந்தையர்கள்
கொங்கைத் தழும்பும் புதைத்திடும் புயத்தில்
தண்ட மாலையும் கையில் காப்பும்
சர்வா பரணமும் தரித்து ஒன்னார்
கண்ட வரிகண்ட ரணசூரன்
கருணை செறிபிள்ளைக் கரையாற்றூர்
மண்ட லீகர் எழுபதுபேர்
மக்கள் மணவாளர் மகிபர்களும் 239

மாது செறிதுங்கம் திகழரண்டு
வல்லி அரசமக்க ளும்வாகை
தாது செறிகின்ற விறல்தளத்தார்
தரும எழுபது துரைமக்களும்
கோது சிறிதில்லாக் கவிராசர்
கோமான் எனும்சிங்கப் புலவருமாய்
சேது வரையென்னக் கரிமீதும்
சிவிகை பரிமீதும் ஏகினரே 240

செம்பொனின் சந்திர வட்டம்
சிறந்த சாமரம் இரட்ட
ஐம்பொனின் கிரீடம் மீது
ஆதித்தன் கிரணம் தாக்க
வம்பமால் அலங்கல் வெற்றி
வாகையான் பெரிய மாரன்
கம்பமா களிறும் தானும்
காவலர் சூழ நின்றான் 241

நின்றனன் நீல வெற்பின்
நெடியசெம் பவளக் குன்றம்
ஒன்றிய இயற்கை போல
உலகெலாம் புகழ் படைத்தோன்
மன்றல்சேர் தொடையன் வேலான்
மனுநெறி போத்தி ராயன்
துன்றிய நெடும் பதாதி
துரைகளும் இதனைக் கண்டார் 242

கடலில் இசைத்திட்ட சேதுவைப்போல்
கனககிரி ஒக்க நிலைத்தாற்போல்
படலப் பெருமஞ்சத் தெழுந்தாற்போல்
பலதிக் கிலும்இருள் படர்ந்தாற்போல்
உடலில் பெரிய குஞ்சரமாவும்
உற்ற வீரரும் துரைகளுமாய்
அடலிற்கு இசையஐந்து அணிவகுத்து 243
ஆர வாரம் ஆனதன்பின்பு




Scanned with OKEN Scanner

சோதி தருமுத்தின் சவுக்கொளியும்
துய்ய வயிர ரத்தினக்கடுக்கன்
நீதி புகுசெஞ்சொல் செவியிரண்டின்
நிறைந்த வொரிய னுடன்இலங்க
மோதும் இசைவண்டு செறிவாகை
மூரி நெடுவாளும் கைக்கொண்டு
காதிபரும் ஒன்னார் திடுக்கிடவே
கதித்த பேரணி யதனில்நின்றார் 244

முடுகு திமிலையும் உடுக்கைதப்பு
முழங்கும் முரசு மல்லாரிகளும்
நெடுகும் கொடும்கோடை இடியதென்ன
நீண்ட திசையெட்டும் கலங்கிடவே
படுகும் களந்தனில் பரந்துநின்ற
பஞ்சரப் போற்றி மன்னர்வீரர்
நடந்து வந்து சரவுலக்கன்
நன்பவுஞ் சில்வந்து அடுத்தனரே 245

அடுத்தார் அடுத்தவெம் பகைஞர் தம்மை
அருள்மாரய் யன்வீரர் சிலையில் அம்பு
தொடுத்தார் தொடுத்திட்ட பகழி தன்னை
துணித்தார் துணித்தபின் சுடர்வேலை
எடுத்தார் எடுத்தநற் புகழாளர்
எங்கள் உயர குலேசமன்னர்
கடுத்தார் கடுத்துற்று மிடற்றார்தன்
கண்ணில் கனல்போல் கொதித்தெழுந்தார் 246

எழுந்தார் எழுந்தஉற் றவர்பவுஞ்சில்
இருந்த வீரர்கள் எதிர்த்துஒன்னார்
முழந்தாள் இருதுண்டம் படத்துடையும்
முறிந்து சிதறிய மூளைகளும்
விழுந்தார் விறல்சேர் புயபலமும்
மெலிந்தார் விழுந்தார் மலைபோலே 247

குடலும் துணிந்து வெய்ய நிணஞ்சிதறி
குறுக்கு முறிந்து குந்தமும் ஒழிந்து
உடலும் இருதுண்டம் படப்படிந்து
உயர்ந்த வெற்பொத்த இருபுயத்தின்
மடலும் பெயர்ந்து போற்றிமன் வீரர்வாயும்
உலர்ந்து மண்டையும் வெடித்து
அடலும் இழந்து முன்னணி உடைந்து
அசந்து விழுந்தார் மண்தன்னிலே 248

ஓடிப் புகுந்து இரண்டாம் அணியில்
ஒளித்திட்டு இருந்ததை உலகுதனில்
நாடிப் புகழ்பெற்ற இளந்தரத் தரத்தார்
நாட்டார் தனில்கண்டு நகைத்துக்கொண்டு
கூடித் துருபதி னாயிரம்பேர்
துரோணத்திற் புங்கம் சொரிந்திடவே
ஆடிப் பலபூதம் களித்திடவே
அடையலர் உடல்மீது தாக்கியதே 249

தாக்க அடியற்ற மரம்போலே
தரையில் தலைதத்தி விழுந்தபின்னர்
மூர்க்கன் எனும்போற்றி சேகரன்தன்
முடிவேந்தர் இரண்டாம் அணியில்நின்றே
காக்கைக்கு இரையிடும் தொடைவேலர்
கால காலன்தன் கணம்போலே
ஆக்கைக் குடிலுக்கும் வசமுற
அடல்வா ரிதிபோல் அடர்த்தனரே 250

பருத்தித் திரள்போல் நிணம்சிதறி
பதுமையுள மாரன் படைசூரர்
நிறைந்த பவுஞ்சின் நெஞ்சம் கிழிய
நெடிய தடமார்பும் பிளப்ப நிற்றம்
இரைத்துக் குருதி கொப்பளிப்பச் செய்ய
வீரர் சிதற எங்கணும் உதிரம்
முரித்துப் பிளந்த வெள்ளரிப் பழம்போல்
உடலம் வெடித்தஞ்சி ஒடுங்கினரே 251

விட்ட பாணம் சென்றுறத் தாக்க
வெண்மாரையன் வீரிட மேலும்
கட்டும்பரிப் போற்றி சேகரன்தன்
கனகமுடி வேந்தருடன் மேலும்
பட்டுப் பசும்பொன்னின் மணிமுகப்பை
பகுத்துச் சாளரம் விடுத்தாற்போல்
எட்டுத் திசையெங்கும் திடுக்கிடவே
இறந்து விழுந்தார் இளர்ந்தார்த்தார் 252

சிதறி உடைந்தது மெலிந்தார்த்தார்
சேர மடிந்தது செருநர்எல்லாம்
பதறி யணிகெட்டு முறிந்ததுவும்
பலவும் இருகண்ணால் உறநோக்கி
விதறும் சமர்க்களம் தனில்எதிர்த்து
வெட்ட வரும்ஒன்னார் மணிக்குடலை
உதறி ரத்தம்பேய் உறிஞ்சிடவே
ஒருமிக்கு எழுந்தனர் மணவாளர் 253

சிங்கத் திருளென வீரியேசிறித் திரிவார்கள்
செம்பொற் பரிசை கட்டியேவாள் சுற்றிடுவார்கள்
பங்கப்படு சமரேறியே கூடிப் பலபெயரும்
பந்தச் சினமது பாடியே திரிவார்கள்
கங்குற் கடனிகர் கம்பத்தின் மதவாகைக் குழாம்
துங்கச் சிலைமுகில் மாரையன்
அன்புற்றிடு குமரர் துண்டப்பிறை எயிற்றோன்என
முந்தித் தினம் வருவார் 254

பாரக் குலையற்று விழும்பனங்காய்
படியில் உருண்டாற்போல் தலைஉருள
வீரர் குடலற்றுத் தரையூடே
விழுந்ததைத் தங்கள் கையினாலே
வாரிக் கணம்தின்னப் பலகரைபோல்
வலியத் திரள்களும் உயர்ந்திடவே
போரில் களந்தனில் தனித்துநிற்கப்
போகாதென மன்னர் பொருதினரே 255

உலக்கை கையில்கொண்ட மதவேழம்
உலகத்து இருள்வெற்பு நடந்தாற்போல்
அலைக்கின் றடையார் உடலென்னவே
இமையோர் அமுதுக்காய் நெடுங்கடலை
கலக்கும் படிபோலத் தடியாலும்
கத்தி இசைத்திட்ட மருப்பாலுமே
பிலக்கப் புடைத்தெட்டிப் பிடித்தடிப்ப
பின்னிட்டார் வென்னிட் பார்களெல்லாம் 256

அடித்த தடிதன்னைத் துணித்துவெட்டி
ஆனை மருப்பையும் மோதடித்து
பிடித்த துதிக்கையைத் துணித்து நெஞ்சம்
பிளப்ப சவரசங் கதனாலே
இடித்துக் குமுறியே வசமிலட்சம்
இசைந்து விழுந்தாற்போல் பொரித்திடவே
மடித்துக் கால்மேலும் தலைகீழாய்
மாரேந்திரன் ஆனைப் படைவீழ 257

ஆனைப் பிணம்வீழ அதன்மேலே
அனிந்தேறிய மாவுத் தரும்வீழ
சேனைத் தலைவரும் சிலர்வீழ
சிவிகைத் திரள்வீழ சிவிகையின்மேல்
வானைப் படர்ந்தவெம் பரிவீழ
வாளும் பரிசையும் வடிவேலும்
கானற் பிறந்திட்ட கடும்போரில்
கடுகின் பொடியாக விழுந்ததுமே 258

கண்ட தலமெல்லாம் பிணம்குவிய
காகத் திரள்கள் மேல்குவிய
அண்டை தெரிந்தட்ட பரித்திரளும்
ஆனைத் திரளும்பட் டதுகுவிய
பண்டு இலங்கை ராவணனும்
பச்சைநிற மாலும் பொருதாற்போல்
மிண்டு வரும்போத்தி சேகரன்தன்
வேந்தர் தனைவென்றார் மணவாளர் 259



ககைக் குன்றச்செம் பலபூகம்
குவிந்து காம்பொட்டச் கொடும்பேய்கள்
ஆசமிசை நக்கம் நலைப்புசி
அவித் நதுப்பவெஞ் சிளநாய்கள்
போகச் சிலநர் குலைந்நலை
புலம்பிச் சிகைாகம் பரந்துமொய்ப்ப
மோக ரணதுங்க மணவாளர்
முந்நிப் பொருதிய ரணகளத்தே 260

நண்டு தனைக்கண்ட குரங்கதுபோல்
குரளி தனைக்கண்ட முடவதுபோல்
பெண்டிர் தமக்குஅச்சம் அடைபவர்கள்போல்
பிறந்திக்கு இடம்கொடுத் திடுமவர்போல்
உண்டமனைக்கு இரண்டகம் என்னுமவர்போல்
உடைமையவன் கண்ட அதிசயம்போல்
விண்டுதுரை போற்றிமன் வன்வீரர்
விழுந்தும் எழுந்தோடிப் போயினரே 261

ஓது மொழியுண்மை என இரங்கி
இசை பூவாணி குலதீபன்
மோதும் மணியணிப் படையையெல்லாம்
முதிர்தா ரகைபோல் உறத்திரட்டி
மாது செறிகின்ற புயவேந்தர்
மற்ற வீரர்கண்டு விணின் வெண ...
மீது விளங்கிய விதுவினைப்போல்
வேழப் பிடரின்மேல் இருந்தனனே 262

பரிசை கழட்டிப் பட்டயம்விதிர்த்து
பகர அரிதான சமரேறி
வரிசை யுளவெற்றி மணவாளர்
வண்மை எழுபது குமரர்களும்
கரிசில் சிதற உள்ளம்தவறக்
கண்கள் தெரிப்பக் கன்னமும்பிளப்ப
உருசி யறிநாவும் துணிந்திடவே
ஒன்னார் உடல்மீது தாக்கினரே 263

முன்னிட்டு பின்னிற் பிரியாமல்
முகமும் திரும்பாமல் முனைப்போரில்
வென்னிட்டு அகலாமல் மனம்சலித்து
மீள நினையாமல் மிகும்புயத்தின்
பொன்னிட்டும் போற்றி சேகரன்தன்
பொரும்கூரர் வென்னூறக் கவண்கள்
தன்னிலே கல்விட்டு எறிவார்கள்
திகிரியினால் கருவி தெரிக்கவே 264

துரகம் சிலபட்டது அளவும்இல்லை
தூங்கம் கரிபட்டது அளவும்இல்லை
பரிகம் சிலசெற்றது அளவும்இல்லை
பரிய சிலையற்றது அளவும் இல்லை
மிருகம் தனைவேடர் வதைத்தாற்போல்
வேந்தரெனும் மாரன் வீரர்தம்மை
உரகம் சுமைப்புவி யிமைப்போரில்
உறுத்தி வதைத்தார் போற்றிமன் வீரர் 265

தங்கள் அணிகெட்ட வகையும் ஒன்னார்
தனிவில் கணைதொட்ட ததுவும் கண்டு
வெங்கண் சிவந்தமும் மதம்பொழிந்த
வேழம் தனைக்கிட்ட நடத்திவந்து
செங்கைமுகில் போற்றி சேகரனும்
செய்ய விருதுவிற் கையில்பிடித்து
பொங்கும் சலம்துன்றும் மழைக்கால்போல்
பொழிக வில்அம்பு தொடுத்தனனே 266

## மணமக்கள் மரணம்

கோரக் கணைவந்து மணவாளர்
கோல மணிமார்பில் உறத்தாக்க
வீரர் குலையில்பட்டு உருவியபின்
இறைவா சரணமென் றுறவீழ்ந்தார்
வீரக் கருணைப் பட்டாலிகுல
வேந்தன்பொன் னாக்கப்பொன் அவினாசியின்
மாருக்கு இனிவேணும் உயிரென்னவே 267
அடையார் அடலோடு புகுந்தனரே





Scanned with OKEN Scanner

சிவலிங் கேந்திரன் முனிந்தெழுந்து
சிறந்த புரவியின் மீதேறி
அவனிமிசை வீழத் தரியலர்கள்
அங்கம் பிளந்து நெஞ்சம் துணிய
நவங்கவர் சிறையம்பு பொழிந்தடுப்ப
நன்றி ராக்கியண்ணன் எதிர்ந்து
பவஞ்செய்வார் ஆக்கை குறைஒரு
பத்திரம் தொட அவன்குனிய 268

## இராக்கியண்ணன் மரணம்

நின்ற கொய்யுளை மீதுவளர்
நிருபன் இளைய மன்னவன் உரத்தில்
சென்ற கணைபட்டு விழுந்திடலும்
சிவலிங் கேந்திரன் உடல்வெதும்ப
துன்னும் இருகண்கள் அலைபொங்கவும்
துடிப்ப மேல்மீசை பதரநெஞ்சம்
ஒன்றிக் கணைமாறி ராக்கியண்ணன்
உள்ளம் கலங்கத் தொட்டனன் மண்ணுற 269

பஞ்சல்கரி தின்னிடும் லாடம்
பவிஞ்சு சிதரப் பட்டயத்தாலே
நெஞ்சம் பிளப்பப் போற்றிமன் வீரர்
நெற்றி தகர வெட்டினவகையை
வஞ்ச மனத்தன் பூவாணிகுல
மண்ட லேகரன் பகழிதொட
விஞ்சு மணிமார்பில் தாக்கிடவே
விமலா சரணமென்று அவர்வீழ்ந்தார் 270

சின்னம் பொருதுவதற் கிசைவாரோ
யாம் வாரேன்என அஞ்சிப் பரிவாரோ
கன்னெஞ்சம் இன்னும் கரையாரோ
கண்டகுழி தன்னில் விழுகாரோ
முன்னமும் திடமன்னர் வென்ற
மோசந்தனக்கு இன்னமும் எதிர்த்தால்
சின்னாபின்னம் செய்வேன் என உரைத்துச்
சீறிவரும் அரியென இருந்தான் 271

சேயை வதைத்த போத்திமன் வீரர்
சேனை தனைவெட்டித் தலையறுத்து
பாயும் மதவேழத்து இருகோட்டைப்
பறித்துவரப் பெற்றே னையா
ஓயா தவர்நமக்கு ஆசைசொல்லி
ஓடிச் சலித்துண்ட பரிசில் சற்றும்
ஈய மனமற்ற கயவர் தமக்கு
இணையே யாரென்று சபதம்செய்தான் 272

ஆடும் பரியேறி அலங்கரித்து
அழகு செறிகை வல்லயத்தாலே
பீடுபெற ஐந்து பேரும்சென்று
பெருகு புகழ்ப்போற்றி சேகரன்தன்
கூடும் படையின்முன் நடந்தேறி
கோபித்த தம்பி கொக்கரித்துக்கொண்டு
வேட தென்னின்றயில் வின்பஞ்சில்
விழுந்து வளர்ந்த நெருப்பதுபோல் 273

குத்தி யசைத்து வல்லயம் வாங்கிக்
கொடிய பரியைநிர்ப் பரத்தில்விட்டு
பொத்திமன்னன் வெற்றி யணிக்குள்நின்று
பொங்கு மதயானைப் பவுஞ்சின்கொம்பு
தத்தித் தரையில் திப்பென விழவே
சமரில் சினச்சிங்கம் எனவாகை
கொத்துத் திகழ்மாரன் பஞ்சகுலக்
குருகுலருமே பொருதினரே 274

வேலெடுத் தெறிந்தனர் வில்லிற் பூட்டிய
கோலெடுத் தெய்தினர் குலவு மாரய்யன்
பாலடுத் திருந்த வீரர்குழு பட்டிட
மேலெடுத் தெறிந்தனர் விசைய சக்கரம் 275


Scanned with OKEN Scanner

## கவிராசன் மரணம்

மிஞ்சிய திகிரியில் வீரரும் பயந்து
அஞ்சினா் கவியனும் அந்த வேளையில்
என்செய்வம் என்ன மலைந்த அக்கணம்
மஞ்சு நற்கணை போத்திமன் விடுத்தனன் 276

விற்கணை எதிா்வர மேன்மை கொள்ளவே
நிற்கிற பிள்ளைமா ரையனும் நீங்கவே
சொற்கவி வலன்நுதல் துளைப்பட வேஅரன்
பொற்கழல் நினைந்தவன் புவியில் வீழ்ந்தனன் 277

## சிவலிங்கேந்திரன் மரணம்

வீழ்ந்தான் மாரய்யன் வெகுண்டு சீறியே
சூழ்ந்தனன் போத்தி சேகரனைச் சுற்றியே
தாழந்தவெப் படையொடு சரந்தொட் டேறவே
வாழ்ந்திகு சிவலிங் கேந்திரன் மாண்டனன் 278

மடிந்த பினும்கணை மாரிபெய்து
வாள்மா ரேந்திரன் சேனைகளும்
நடந்து தரியலர் தமைத்திகிரி
நடுவேல் எறிந்துநான் குயர்திக்கிலும்
தடிந்து வீழ்த்தினார் வீரர்களை
தக்கன் வேள்வியை வீரபத்திரன்
கடிந்தவா றதுபோல் குறைத்தார்
கால்கை பிளந்தார் புவிமேலே 279

## போர் தொடர்ந்தது போத்தி வீரர் புலம்பல்

சிங்கம் தனைக்கண்ட உழுவையைப்போல்
தேயு தனைக்கண்ட ஈயதுபோல்
புயங்க மதனைக்கண்ட காகங்கள்போல்
புலவர் தமைக்கண்ட உலுத்தரைப்போல்
செங்கதி ரைக்கண்ட இருளதுபோல்
சிவிங்கி தனைக்கண்ட உளையதுபோல்
எங்கும் சுடர்பொத்தி மன்னர் வீரர்
இதயம் கலங்கியே யவர்புலம்புவார் 280

உசரகுலர் அல்ல விபுதரிட
உயிரைக் கொல்லவந்து உலகாண்ட
அசுரர் இவரென்பார் அசுரர் தமக்கு
அடலே றான வேலரென்றே
துசர மொழிந்தஞ்சித் துக்கமுற்று
கோபித்து அலமந்து சொல்லலுற்றார்
இகலும் படிநமக்கு இப்பவென்றே
இடிதந் திடும்பனை போல்விழுந்தார் 281

சின்னமா ரய்யனும் ரணசூரச்
செவ்வேள் எனும்பிள்ளை மாரய்யனும்
வன்மைப் புரவிவிட்டு இறங்கிச் செம்பொன்
வாளும் பரிசையும் கையில் வாங்கி
வன்னமன் உத்தண்ட ராயன்
ஆவுடையானும் கற்பகத் தானும்
பொன்னின் சிலையும் அம்பும்எடுத்துப்
புயலும் காற்றெனப் பொருதனரே 282

புகுந்து பகழிகள் தொடுத்து லட்சம்
போத்தி சேகரன் வீரர்நெஞ்சம்
தகர்ந்து கடகெலும் பொடிந்துபனஞ்
சல்லி போலத் தலையொடுவீழ
மிகுந்த புகழாளன் உயரகுலத்து
வேழமா ரேந்திரன் விழித்துணைவர்
பகர்ந்து பலபேரும் களிசூர
பாரமணி வாளால் வீசினரே 283

மதிசொல் லிடக்கேட்ட செவியாளன்
மனம்வெண் டழலில்பொங்கி மலையினிலும்
அதிக மாகிய நரபலிகொள்
யானைதனைக் கிட்ட நடத்திவந்து
முதிரும் திமிலை திண்டிமமும்
முரசு மல்லாரி முழங்கிடவே
சதுர நெடுந்தலம் துணுக்கமுற 284
தருண பூவாணி குலன்எதிர்த்தான்




Scanned with OKEN Scanner

சேரத் திரண்டிருந்த தரையும் வெற்பும்
சிந்து திரைக்கடல் கூட்டங்களும்
காரித்திரள்களும் அதனூடே
கலந்து இடரிய இடியும் ஒன்றாய்
கோரத் தளங்கொண்டு எதிர்த்தாற்போல்
குமிறிப் பலபெரும் கூட்டமிட்டு
நேரொத் திருவரும் சமரேறி
நிமிஷ கரமார்த்துப் பொருதினரே 285

மூண்ட சமயத்தில் ரணசூரர்
மோகனெனும் சூர மாரய்யனும்
தாண்டும் புகழ்ப்பிள்ளை மாரயன்செங்கை
தாதா வாகிய உத்தண்டனும்
தூண்டும் பரிமன் ஆவுடையானும்
தோன்ற லான கற்பகத்தானும்
வேண்டும் பொத்தி சேகரன்தன்
வீரர்தமைக் கையின் மணிவாளால் 286

குறுக்குத் துணியவெண் டலையுருள
கோல மணிமார்பும் தகர்ந்திடவே
நெறுக்கென்று எயிறுகண் உதிர்ந்திடவே
நெடிய முழங்கை முறிந்திடவே
உறுக்கிக் கொடுகிட்டி யுறவெட்டியே
உறும்பட் டடையில்செங் கரும்புவைத்து
நறுக்கிப் பலதிக்கும் எறிந்தாற்போல்
நண்ண லார்தமை வதைத்திட்டார் 287

வதைக்கும் கடிதுகண் டமர்குலனாம்
மண்ட லேசுரன் ரணசூரர்
மதிக்கும் திறத்தின்முப் பிடியும்தண்டும்
வல்லயம் சமுதாடும் அதனாலே
துதிக்கும் புகழ்மாரன் துணைவரிட
சூரர் தனைச்சூரர் வழியென்னவே
பதைக்கப் பதைக்க வென்னிட மார்பில்
படரீட் டியினாலே புடைத்தனரே 288

வெண்ணெய் திருடிய நெடுமாலும்
வீர வாள்அரி இரணியனும்
பன்னு மணிக்கோயில் எதிர்த்துநிலைப்
படிபோல் இருவரும் பொருபோதில்
தின்னும் மிகுமதக் கெசந்தன்னையே
செலுத்திப் போத்தி சேகரனடத்தி
ஒன்னுக் கொன்னு சற்றும் இளையாமல்
ஒருமித் திருவரும் பொருதினரே 289

எஞ்சியோர் மரணம்

வீக்கும் கணைநெஞ்சில் புகும்போது
வேள்ஆகிய சின்ன மாரய்யனும்
தாக்கமில் பிள்ளை மாரய்யனும்
தன்மனான உத்தண்ட ராயனும்
சேர்க்கும் புகழ் ஆவுடையானும்
தீர்க்க முதுவன் கற்பகத்தானும்
வாள்க்கைப் பிடிவீரர் கடும்கோபம்
மனது தமக்குள்மட் டடங்காமல் 290

செம்பொற் கேடயம் தாளங்கொண்டு
செங்கை மணிவாள் தனைவிதிர்த்து
அம்பொற் புயத்தார் உயர்குலத்து
அரசர் போத்திமன் னனைபடுத்து
வம்புற் றிடும்ஆனைத் துதிக்கையையும்
மத்த கத்தையும் வலியரண்டு
கொம்பற் றிடவெட்டி அவன்மார்பில்
குத்தி முத்தியில் அடைத்தனரே 291

சுற்றத் தொடுதுங்க உயரகுலர்
துஞ்சும் போதுவெஞ் சினவேழம்
இற்று விழப்பொத்தி சேகரனும்
ஏங்கி வீழ்ந்தனன் வீழ்ந்தஅப்போ
உற்ற காயம்சத் துவம்போக
உயிரும் திரும்பிவந்து உடல்புகுந்து
வெற்றி கருங்கொம்பு பிடிக்கச்சொல்லி 292
மீண்டும் யானைமேல் ஏறினனே

அரசர்க்கு எதிரான குடிபோலே
அறிவிலான் கற்ற தமிழ்போலே
பரிசற் றிடும்விஞ்ச யரைப்போலே
பதுமச் சலமற்ற குளம்போலே
விரசிப் பொருதுங்க உயரகுல
வேந்தர் இறந்தபின் பவுஞ்சுடைந்து
சரசக் குணன்ளங்கள் மாரேந்திரன்
தானை பவுஞ்சினுள் புகுந்ததுவே 293

உலகை ஏழுகடல் வளைத்தாற்போல்
உததி தனையும்வின் டலங்களெங்கும்
இலகும் இருட்படர்ந்து எழுந்தாற்போல்
இராச கேசரி மாரேந்திரன்
நலகுங் குமமார்பன் பெருஞ்சேனை
நாலு திசையெங்கும் பரந்திடவே
கலகம் செயும்போத்தி சேகரனும்
கனக மகுடா சலனும் கண்டார் 294

காலக் கடல்போலே வரும்வெள்ளத்தைக்
கட்டி நிறுத்திய அணைபோல
சீலக் குணம்பொத்தி சேகரனும்
சேனை யாவையும் உறத்திரட்டி
ஓலக் கடுங்கோடை இடிபோல
உயரப் பலமேளம் மிகமுழங்க
நீலக் கயல்வெள்ளி மலையிரண்டும்
நேர்ந்த படிபோலே பொருதினரே 295

அயில் சுற்றிடுவார் சக்கரம் அடலுற் றெறிவார்கள்
அதிரப்பரி மதயானையை முடுகிக்கொடு செறுவார்
கையின் முப்பிடி படையைக் கொடுகை சுற்றியே அடர்வார்
கடலுட் பொளியென மாரய்யன் ரணசுத்தர்கள் பொருவார்
குயவர்க் குயிராம் சக்கரமெனச் சுற்றியே வருவார்
குமிரித்திரி இடியொப்பென நடலத்தோடு அடர்வார்
அயில் போத்திமன் இருபக்கமும் நிறையுற்றெழு வீரர் 296
அமருக்கெதிர் வெகுளப்புலி எனமுட்டியே வருவார்

நாகசுரம் கொம்பு சின்னம் நகாரி எக்காளம் முழங்க
மோகசரம் இடியெனவே முரசொடு பேரிகை அதிர
சேக நிகரனைய மனத்திரள் போத்தி சேகரனும்
மாக மெங்கும் களிசுர அடலேறு போல்சினந்து 297

தொட்டகணை யோடிலட்சம் சூரர்களும் கணைதொடுத்தார்
இட்டமுள மாரேந்திரன் இரண்டருகும் நின்றவரில்
பட்டமன்னர் அளவுமில்லை பரியிறந்தது அளவுமில்லை
நெட்டுடல் மதயானை நிதமிறந்தது அளவுமில்லை 298

இல்லையென்னா வாய்மையுடைய இங்கிதமா ரேந்திரனும்
மல்லைவென்ற எழில்வேழம் தனியொக்க வேநடத்தி
சொல்லரிய போத்திமன்னன் சூரருடல் தலையும்
கல்லிலிட்ட பசுங்கலம்போல் கடகரியும் வதைத்ததுவே 299

குடலறுந்தது உடல்முறிந்தது குரலறுந்தது துரகதம்
மடல்பெயர்ந்தது புயமொடிந்தது வலியிழந்தனர் வீரர்கள்
கடகெலும்புகள் சிதரிமுன்பொரு கரம்நெரிந்தது கடகரி
விடமருந்திய கயலெனும்படி மெலிவுகொண்டனர் யாவரும் 300

நெக்குநெக்கென யானைகுத்த நிமிர்ந்துபட்டது லட்சமாம்
மிக்கபொத்தியன் வீரர்பட்டு விழுந்திருப்பது லட்சமாம்
சக்கரத்திரு மால்வதைத்த சமர்க்களத்தினை யொக்கவே
திக்கடங்கலும் வெற்றிகொண்டு சிறந்தமாரய்யன் நின்றனன் 301

### போத்தி மன்னன் அமைச்சர் சமரசம் கூறல்

பரியணியும் கரியணியும் பகர்சூரர் இறந்தபின்பு
அரியனைய போத்திமன்னன் அடிபணிந்து அமைச்சர்சொல்வார்
ளரிஎழுநல் கானகம்போல் இறப்பதல்லால் பிழைப்பதில்லை
வரியணிந்த வேலரசே வாருமையா போவம்என்றார் 302

வேலினுக்கும் முருகநெடு வில்லினுக்கும் பார்த்தன்எனும்
மாலினுக்கு நிகரான மாரேந்திரன் நம்மையெல்லாம்
காலனுக்கும் கணங்களுக்கும் கடும்பேய்க்கும் குறளிகட்கும்
நாலுதிக்கும் விருந்திடுவான் நாங்கள்சொன்னோம் அறிதிர்என்றார் 303

## மாரமியனால் மரணம் அடைவது புகழ் எனல்

இனமும்ஒன்று விருதும்ஒன்று யானும்ஒன்று அவனும் ஒன்று
மனமும்ஒன்று ஆண்மைஒன்று மடிவதிந்த நாளும்ஒன்று
கனமும்ஒன்று மாரேந்திரன் கையம்பால் யாம்இறந்தால்
தனமதுள்ள காலம்மட்டும் தமக்கதுவே கீர்த்தியென்றார் 304

வரும்வினைகள் காராதான் வாழ்க்கையெல்லாம் நயந்துபட
எரியினிலும் பஞ்சினிலும் இட்டகடும் தீயதொக்கும்
அருவினையே செறிந்தபோத்தி மன்னவனே யாமிறக்கும்
செருவினையே செய்யஉந்தன் சேனையணி வகுத்திடென்றார் 305

## போத்தி மன்னன் இறுதிப்போர் வெண்பா

உற்ற கருமம் உறுமமைச்சர் தாமுரைக்க
சற்றும் மனந்தான் சலியாமல் – நற்றவம்சேர்
பொத்திமன்னன் தன்படையைப் போத அணிவகுத்தான்
தத்தும் திரைகடல்போல் தான் 306

சற்றும் சலியாத வலிதன்னையும்
தானை யாவையும் வகுத்ததையும்
எற்றைப் பொழுதினில் வதைப்பன்என்று
இதயந் தனில்உற்ற வகையறிந்து
மற்று மறுமன்னர் வரையேற
மாதர் மடலேற அகமேற
வெற்றி மதயானை தனையேறி
வேழ மாரேந்திரன் பக்கம்வந்தார் 307

சாதி தொண்ணூற்றெட் டவரும்பட்டு
தக்க வீரரும் தொழிலர்பட்டு
நீதி யுளபடை யடங்கல்பட்டு
நிறைந்த பிணக்காடாய்க் கிடப்பக்கண்டு
ஓது புகழாளன் மாரேந்திரன்
இரைந்து சீறியென் டிசைநடுங்க
சூதன் போற்றி சேகரன்மேல்
சுராந்தகன் போலவந் தடர்ந்துகொண்டான் 308

மெய்யில் கவசகட் டிலங்கமுடி
விளங்கும் தலைதனில் தவணியிட்டு
கய்யில் கயிறிட்ட வலையுங்கொண்டோர்
களத்தில் எதிர்ப்பதும் துரைக்கியல்போ
உய்யக் கரிதியுட் கரிதனக்குள்
உளமெய் யனுக்கும்பொற் கவசமிட்டு
மய்யிட் டிடும்கண்கள் இமைக்குமுன்னே
வாடா போரென்றான் மாரேந்திரன் 309

மருளு மத்தை யூமத்தையும்
மதுகஞ் சாப்பனி சாராயம்
திரளப் பிசைந்துண்டை தனைமேய்த்து
சிறுமதத் தோடுமத மூட்டிக்களிறு
மருப்பின் கத்தி களும்கட்டி
காலும் முகத்தில்மத் தகந்தன்னிலும்
பரசேர் இருப்புப்பா டகங்கள்கட்டி
பாதந் தனக்குவெண் டயம்பூட்டி 310

கரத்தில் இருப்புலக் கையும்கொடுத்து
கரடாசலம் நின்ற பிறகுதுங்க
உரத்தில் மருவச் சிராங்கிதொட்டு
ஊறுபெரு வில்லும் கையிலெடுத்து
நிரைத்த சரபாணம் தெரிந்துகொண்டு
நெடிய முருவலந் தகன்போலே
இரைத்து அதுப்பியென் டிசைநடுங்க
எல்லா வகைமேளம் முழங்கிடவே 311

மலைகள் அசைந்தாற்போல் அசைந்துகொண்டு
வாலும் துதிக்கையும் மிகவீசி
குலைகள் இசைத்தகோ வாயதைக்கி
சுளர்மத் தகம்செவி குலுக்கிக்கொண்டு
நலகண் சிவப்பமும் மதவேழம்
நளின மதப்பிடர் தனில்ஏறி
இலகு புகழ்போற்றி சேகரனும்
யானை கிட்டநேர் நடத்திவந்தான் 312

## யானைகள் போரிடல்

கல்லுக் கெதிர்கல்லுக் கெடுத்தாற்போல்
கடலும் கடலும்மண் டியதென்னவும்
சொல்லுக் கெதிர்சொல்லும் சொலுமவர்போல்
சோதித் திருச்செங்கை மாரேந்திரன்
நல்லுற் றிடும்மேனி யானைதன்னை
கடலின் திரள்போல் எதிர்நடத்த
வெல்லும் அமர்க்களம் கிடுகிடென்ன
யானை இரண்டும்வந் தெதிர்த்ததுவே 313

ஊழிக் காலத்து நெடுங்காற்றும்
ஒளிரும் சென்னி வாசுகியும்
ஏழு மேகம்மைக் கடல்சுவற
எழுந்த வடவையும் போல்தாக்கி
மீளும் துதிக்கையும் பருத்தகொம்பும்
நெற்றியொடு நெற்றி களும்தாக்கி
வாழும் புவியெங்கும் செயிப்பமத 314
யானைகள் இரண்டும் பொருதியதே

சந்தம் இலங்கப் பொற்பும்அசைய
தயங்கும் ரத்தினம் வயிரம்பச்சை
நிந்து நிறமொத்துச் சவுக்கொளியும்
இரண்டு செவியிலும் துலங்கிடவே
செந்தேன் நிகரான மாறையனும்
தீரன் எனுபோற்றி சேகரனும்
விந்தை செழும்போர் முகத்தினிலே
வியர்வை புறப்பட இருந்தனரே 315

உய்யும் சமயத்தில் கைலாய
கண்ணப்பனும் முன்னி யுருத்தெழுந்து
வையம் புகழுமெம் போற்றி
சேகரனுக் கதம்வந்து தென்னம்மைய
எய்யும் பகழி யடுறப்ப
வீற்றி ருந்தமா ரேந்திரன் யானை
வெய்ய தனுக்காமன் தடுப்பப்
பங்கமிட்டு உரத்தைத்து விழுந்ததுவே 316

விழுந்த வாறுகண்டு அருகுநின்ற
வீர பாதரு கான்முனிந்து
தெளிந்த பொருளன்மேல் சரம்தொடுப்ப
கைலாச கண்ணப்பன் செறிந்தெதிராய்
கிளர்ந்த பிறகு தோகைகள்
மறைப்பதும் வீசியே யெறிவோரும்
இழந்த பிறகு மற்றிருமன்னரும்
எதிர்த்துக் கொடியவெங் கணைதொடுத்தார் 317

### மாரய்யன் யானையின் வீரச்செயல்

மெத்த அவசமுற்று இருவோரும்
மெலியும் போது மாரையன்யானை
துத்தன் எனும்போற்றி சேகரன்தன்
துங்க யானையின் மணிமுடியில்
குத்தி நெடும்கொம்பு தனையொடித்து
கொடிய துதிக்கையைத் துணித்துக்கண்டம்
தத்த மலையொத்த உடல்முறிய 318
தரணி தனில்போட்டு மிதித்ததுவே

வலிய மதவேழம் மலைபோலே
மடிந்து தரைதனில் விழும்போது
புலியினிட வைந்து கரமொடித்துப்
புறமிட் டோடிய வகைபோலே
கலியனெனும் போற்றிமன் மாரையன்
கடிய ஓடிவெங் களத்தினின்று
மெலியும் படிநாண மாற்றாமல் 319
மீளும் சிலையைச்செங் கையிலேந்தி




Scanned with OKEN Scanner

## மாரய்யன் மார்பில் அம்பு

நாணிய யானையேற்றித் தீவிரமாய்
மாரேந்திரன் போற்றி சேகரனும்
பூணும் அலகம்பு தனைத்தொடுத்து
புகழ்மா ரையன்மேல் விடுத்திடவே
வேணி யரன்பாதம் பெறலானும்
வேண்டும் வரங்கள்பெற் றிடலானும்
தோனும் திருமகள் இலங்கிநின்ற
துங்க மணிமார்பில் தாக்கியதே 320

## போத்தி மரணம்

பட்ட சுரம்பு மார்பில்நிற்ப
பாரகே சரியெனும் மாரேந்திரன்
அட்ட கஜமான ஆனையைவிட்டு
அகிலம் தனிலுவந்து நெளிந்துநின்று
துட்டன் போற்றி சேகரன்தனையும்
துரத்தி அவன்சிகை தனைப்பிடித்து
வெட்டி அவன்தலை தனைஉருட்டி
விளங்கு ரணகளத் தருகில்நின்றான் 321

இலங்கு கடும்பாணம் மார்பில்நிற்ப
இதய ஞானக்கண் அதைநினைத்து
அலங்கலுடன் கங்கைச் சிரமுங்கண்டத்து
ஆல காலமும் மணங்களுடன்
நலங்க விழித்தநன் னுதலும் கண்ணும்
ரவியும் மதிநின்ற நாட்டங்களும்
கலிங்கக் கடற்படித் தனையீன்ற
கன்னி இடப்புறம் தனில்வயங்க 322

## அர்த்தநாரீசர் மாரய்யனுக்கு அருள்தரல்

வெள்ளை விடையேற வெகுஅனந்தம்
விளங்க நீறுமெய் மேலணிந்து
பிள்ளை மதிச்சடை துலங்கிடவே
பெருமை செறிஅர்த்த நாரீசர்
உள்ளம்தனில் தெரிசனை கொடுத்து
உற்ற காட்சிதந்து அருட்கயிலை
வள்ளல் கரந்தபின் மாரேந்திரன் 323
மாறாப் பேரின்ப மவுனமுற்றான்

உற்ற உயிருள்ளம் தனில்சரிந்து
உம்பர்கோன் என்னக் களத்தில் நன்றாய்
வெற்றி கொடுமார நிருபவர்பேர்
விரைந்து சிலபேய் கஞம்திரண்டு
கற்றைச் சடைகளை விரித்துக்கொண்டு
கண்ணைப் பிதுங்கமேல் விழித்துமெல்ல
மற்ற பிணந்தன்னை எடுத்துரத்தம்
வழிய நெடுமார்பு தனைக்கிழித்து 324

ஈரல் தனைத்தின்னும் சிலபேய்கள்
இருந்தும் அமிர்தஞ்சி குறளிகள்தான்
மூரல் சிலசெய்யும் சுழுவில் நின்று
முந்து கரங்காட்டி யழைத்திடும்பார்
பார மதயானை பிணந்தனையும்
பரியின் பிணத்தையும் எடுத்தருந்த
நேரம் இலையென்று நேடியிருள்
நிலமண்ட லீசர்தன் சதையைத்தின்னும் 325

## மாரய்யன் மனம் நிறைவு

ஞாளி குலைப்பச் செந்நாய்கதற
நரிகள் விழுந்தோட ரணகளத்தில்
தூளி பரக்கக் கிழட்டோரி
தொனியும் குலைநற் றுடியிடக்கை
காளி நிருத்தம் செய்திடக்கடிய
கால நெடும்பூதப் படைசூழ
வாளி இலங்கும்வெண் களந்தனிலே
மாரேந்திரன் கண்டு மகிழ்ந்திருந்தான் 326

எல்லாம் பவிஞ்சும் மாரேந்திரன்முன்
இனிய கயிலாய வரைமுகமாய்
மல்லார் குயமீது மணிமார்பில்
வாளி யுரத்தைத்து மனம்களித்து
உல்லாச மதாக வேயிருந்தான்
உயிரை யவன்முன்னே வழங்காமல்
பொல்லார் கதியாலே பயந்தோடிப்
போயோர் புலையனும் மறைந்திருந்தான் 327

முடியுடை வேந்தர் கோடி
முனையுள வீரர் கோடி
கொடியவெம் புரவிநீண்ட
குஞ்சரம் இவையல் லாமல்
படியினில் தொண்ணூற் றெட்டுப்
பலர்களும் இறப்பக் கண்டு
வடிவுடைப் பெரிய மார
மகிபனும் மகிழ்ந்தி ருந்தான் 328

## மசரி பூதகியோடு மகனைத்தேடல்

நாட்டினிலே இயற்கை மூதூர்
நன்னகர் இயற்கைச் செங்கோல்
தாட்டிமை இயற்கை பெற்றுத்
தரணியில் வதுவை செய்து
மீட்டினில் இயற்கை வெம்போர்
விளைந்தபின் மசரி மாதும்
தீட்டுவேல் விழி பூதத்தி
யுடன்வந்த செயலைக் கேண்மின் 329

நவிகுல மரபில் தோன்றும்
நளினமா மடந்தை யோடும்
அவிபமா ராட்ட கம்தோல்
அரிவையும் எகினம் ஊர்தி
விவிதகா ரணத்தி னாலும்
ரஞ்சித முறவே கூடி
அவினைதன் கருணையாலே
அரியதெக் கணத்தில் வந்தார் 330

நீண்டபல தேயமதில் நீதியதாய் வாழ்ந்திருந்து
பூண்டதவம் செய்துபெற்ற புத்திரரைத் தான்தேடி
தாண்டுதிரை வாரிசூழ் தாரணியெ லாம்வினவி
ஆண்டகையான் மாரேந்திரன் அன்பாக வேவாழும் 331

கங்கைநதி சூழ்ந்தபிள்ளைக்
கரையாற்றூர் வீதிதன்னில்
செங்கனக மயில்போல
செங்கமல லட்சுமிபோல்
அங்குநின்ற போதுகண்ட
அரசர்களும் யாவரும்வந்து
இங்குவந்த காரணம்ஏன்
எந்தநகர் செப்பும்என்றார் 332

### தனுக்காமன், பாதருகார்

இனிக்கேளும் மன்னவரே எங்கள்துணை அரசமக்கள்
பனிக்கால மதிமுகத்தோர் பகைஞர்வெம்போர்க் கடல்ஏறி
தனுக்காமன் பாதருகார் இவர்தகைமைத் தலத்தைவிட்டு
கனிக்கான மொழியுடையார் காமவல்லி தனைநினைந்தே 333

நீடியதே வேந்திரனை நேரான மக்களையான்
தேடிவந்தேன் என்றுசொன்னாள் சீர்சேர்பூ தத்தியன்று
நாடிநின்று கேட்டவர்கள் நாரியரே எங்களிட
நாடியவெம் பரிமாரன் அண்டையிலே சஞ்சரித்து 334

### ஓடைப்பள்ளியிலும் போர்க்களத்திலும் மசாி

மெச்சியவர் மனங்களிப்ப வேண்டுவதெல் லாம்கொடுத்து
வைத்திருந்தார் எங்களிட மாரேந்திர னுடன்வதுவை
உச்சிதமாய்ச் செய்வதற்கு உயரோடைப் பளிநகர்க்கு
நிச்சயமாய்ப் போயினர்காண் நீகேள்பூ தத்திஎன்றாா் 335

என்றசொற்கு இரங்கி முந்த
இருந்தவ ருடனே யங்கே
சென்றுநாம் வாரோம் என்று
செயம்பெற விடையு கந்து
அன்றுவந் தோடைப் பள்ளி
அங்கினும் தேடி யோடி
வென்றிசேர் அலங்கல் மார்பன்
வெம்படைக் களத்தில் வந்தார் 336

எட்டுத்திசை யெங்கும் பிணங்குவிய
திருந்துசில பேய்கள் கரம்காட்ட
வட்ட மிடும்பரி யானைகளும்
மண்ட லீகரும் மடிந்திறந்து
பட்டுக் கிடந்தனர் அதைக்கண்ணால்
பதுமை பூதத்தி அம்மைகண்டு
விட்ட குறையோ பரமேட்டிதான்
விதித்த வரைவோ எனஇரங்கி 337

மாரேந்திரன் மசரியை வினவல்

நாலு திசையிலும் உறநோக்கி
நளின மயில்போல் நின்றிடும்போது
மாலை நிகரான உயரகுல
மாரேந்திரன் கண்டு களிகூர்ந்து
சீல மலைமங்கை மலர்மங்கையோ
செம்பொற் சிலையோ குயிற்குலமோ
ஆல விடந்துன்றும் களத்திலதோர்
ஆர்கான் உனதிடபேர் சொல்லென்றார் 338

வெங்கட் கரிவேந்தே மாரேந்திரா
வீமரனையாண் டரச மக்கள்
உங்கட் குளராகித் தானிருந்து
நோன்மையில் லட்சம் சலித்தவர்கள்
திங்கட் சடையோனைத் தவசுபண்ணி
செல்வ முறப்பெற்ற இருவர்மக்கள்
யாங்கள் திருநாமம் சாத்திப்
புகழென்னக் கேட்டி என்றார் 339

எந்தன் சமர்க்களம் தனில்நாங்கள்
இயற்கை பொருந்த வருகையினால்
விந்தைப் பூதகன் ஆதியென்றும்
மிகுந்த மசரியென் றேசொலலாம்
அந்த முன்னுயிர் புவியில்வைகி
அரங்கனார் உறைவது மலையெனவே
சிந்தை களிகூர இதுமவரே
தெரிய அடவில் வந்தோமெனவும் 340

மாரனிலும் வல்ல மாரேந்திரன்
மாது சொலும்மொழி தமக்கிரங்கி
நார விழியனைக் கருளாலே
நாங்கள் அனைவோரும் படைபொருதி
தீரன் எனும் போறி சேகரனை
செறுத்து மணிமுடி தனையறுத்து
போரில் மறந்தனன் உமதுடைய
புதல்வர் இறந்தனர் மயிலே யென்றார் 341

பிறந்த உயிரெல்லாம் இறந்ததுதான்
பின்னும் இருக்கதுன் னாரெண்ணினால்
மறந்து மிருப்பானோ படைத்தோரும்
வானாளாம் பாவம் அடையாமல்
திறந்தாங் கியசாத்த நாசீர்
செம்பொற் பதம்பெற்றச் செழித்தசெம்பொன்
நிறந்தாங்கிய மண்ணுலகு உள்ளவரை
முடியும் காலமும் கீர்த்திநிற்ப 342

பெற்றோம் யாமென்று மாரேந்திரன்
பேதை பூதத்தி யம்மையுடன்
உற்றோ தியபின்பு மெதுடனே
உமையங் காளர்க்கும் ஆளாக
சற்றோ வழிபாடுடன் பாட்டும்
பிசகாமல் முன்பாகவே இருந்தோரும்
நற்றோ ருயர்ந்த மக்கள்தமை
நினைந்தநமை விட்டோடியே இறந்தோரும் 343

உந்தன் மதலைகள் இருவரையும்
உண்மை யாகவே யாராய்ந்து
வந்து சொலும்என்று மாரேந்திரன்
மாது பூதத்தி யுடன்உரைக்க
கந்தம் திகழ்வைந்தல் அவிழ்ந்திடவே
கனக மயில்போலே நடந்துசென்று
முந்து சமர்க்களம் தனில்தேடி
முடிவேந்தர் தம்மை யுற்றோர்க்கு 344

## மசரி மக்களைக் காணல்

அனுமட் டமர்க்கஞ்சா வீரர்என்றே
அருள்கேட்க பூதத்தி அம்மைமெச்சி
பிணைவிட் டிலகிய விழியிரண்டால்
பின்னும்முன்னும் நோக்கி வரும்போது
பணைமட் டிலகு குங்குமத் தானைத்தான்
பங்கேருகக் கையில் மலர்கொடுக்க
இணைமட் டிலங்குசெந் தொடைமார்பர்
இருஅரச மக்களை யும்கண்டார் 345

கண்டார் விழுந்தழுதார் புரண்டழுதார்
கண்ணீர் பொழிந்தார் துயரநெஞ்சம்
கொண்டார் மகனே மகனேயென்றார்
கொடிய கதிரவ னும்தாக்க
வெண்டாய் உலர்ந்தநெற் பயிரானார்
நித்தம் உனைநம்பி வளர்த்தஎம்மை
அன்டா திறந்தீரோ அமர்அமைந்தது
அர்த்த நாரீசர் திருவுளமோ 346

பெற்ற தாய்என்பது அறியீரோ
பேசா திருப்பது சினம்தானோ
இற்றைநாள் அளவுமை தேடாமல்
இருந்தவள் நெஞ்சம் எனநினைந்தோ
சற்றா யிலும்கண்ணால் பாராமல்
தன்னைப் பகராமல் இருப்பதுதான்
மற்றார் அணியில் உங்களைவிட்டு
நாங்கள் உயிர்கொண்டிங்கு இருப்போமோ 347

உண்ட சோற்றுக்கு உயிர்வழங்கும்
எங்கள்தமை என்றும் உறவாகக்
கொண்டு தாங்கிய மாரேந்திரன்
கோல மலர்ப்பதம் தனில்வீழ்ந்து
மண்ட லீகர்கள் பலமென்ற
வார்த்தை வாசிக்கு உயிரீய்ந்த
அண்ட முகமெங்கும் புகமுறவே
ஆகாய மாகவே நிழலுமிட்டான் 348

கூட வருவேன் என்றவர்சொல்லிக்
கொடிய போர்க்களத் திசைகள்எட்டும்
பேடை யனம்போலத் தேடிக்கொண்டு
பெருமை யாகவே வரும்பேடை
ஆடி அதனைவிட்டு அகலேன்என்று
பயந்து ஓடிய புலையனுமே
கோடை காலத்து மான்எனவே
குளிர்ந்த செடியினுக்குள் நுழைந்துகொண்டான் 349

ஒழிந்தும் இருக்கின்ற வகையைக்கண்டு
உகப்பாய் என்று உரைத்தபின்பு
கழித்து இருக்கின்ற சமர்க்களத்தில்
கருதிப் பார்த்து மாரேந்திரனை
விழித்து மங்கே தாமும்கண்டு
மேன்மை பூதத்தி விளம்பலுற்றாள்
செழித்த மசரிக்கும் எந்தனுக்கும்
செப்புவாய் நல்ல கதியைஎன்றே 350

ஓடைப்பதியார் போர்முடிவு அறிதல்

கதியடைந்த மாரேந்திரன் பதம்காண
கருமம் புகலும் இருவோரும்
நதிசேர் ஓடையம் பதியிற்சென்று
மணவாளர் கள்பேர் நயந்தீர்என்று
வதுவை மாதருக்கும் உரைத்தும்இப்போ
வருவாய் எனஉகந் தேகியவர்
கதிரவன் குடதிசைப் பொருப்பில் 351
மறையும் காலையில் நகரடைந்தார்

நகரில் உயர்மாதர் எழுபதுபேரும்
நேர்கண்டுஉமது நாயகராய் உற்றவர்
புகரில் பதவியை அடைந்தார்கள்
பொருவறக் கண்டோம் என்ன
நிகரில் பனிக்கதிர் கண்டாற்போல்
அமைந்த சோபனத் தெரிவையர்கள்
பகர்ந்த பின்செல வீரமுற்றுப் 352
பரிந்து அவர்பின்னர் ஏகினரே

ஆகச் சமர்க்களம் தனில்உறையும்
எங்கள் மாரேந்திரன் தமைக்கண்டு
தோகையர்கட்கு ஆசி கூறியபின்
கூர்ந்து பேரின்ப மொடுசொல்லுவார்
வாகுகிளர்ந் தோங்குநீவிர் முற்றும்இவர்
வசிக்கும் இடம் வந்தீர்கள் என்றே
நாகரிக மாகவே (உலகியல்படி நடப்பீர்)
மற்றைத் தமது நெஞ்சத்தில் நண்ணும் 353

## வெண்கல் எரிமூழ்கல்

பூதனை மலர்க்கரத்தில் பற்றி
பூம துங்கரின் குவித்து
மேதை முழுஞான பரம்பிரம
வெஞ்சித்திர பானுவதீ நுழைந்து
வாதையற விரிந்தே (எரி) மூழ்க
வனிதையர்கள் யாவும் மகிழ்ந்தனலின்கண்
கோதை நகரீசன் தனைநினைந்து
விழுந்து கதியருள் குறுகினரால் ! 354

## அப்பச்சி மாரய்யன் தொன்மை

தப்பற்ற காரண மேதகும் வண்மை
மெய்ப்புற்ற தெய்வம் எனப்புகழ் விஞ்ச
செப்பச் சுகம்கதி தேடிய தொன்மை
அப்பச்சி மாரய்யன் ஆகிய தன்றே 355

## வாழி விருத்தம்

அரிய கிரணச் செங்கனக வெற்பின்
அருகு தென்திசை யினிலே வயங்கும்
உரிய நாவலந் தீவினில்உயர் கொங்கினில்
செம்பொன் உரக வெற்பில் விரியரப்
பளிங்கு (தெய்வ) மாதவன் தன்மையால்
விமலைக்கு ஒருபுறம் அளித்த பிரான்
தூரிய சுடர்ப்பாதச் செயல் வாழி
தூய சரவணத்தில் உதித்து துணைவர்
சூள்தரச் சுரர்துயரம் காய அசுரரை
அகற்றியும் செங்குன்றின் கதிர் வாழி
குகன் வாழி மேய கடவுளாதியர் வாழி
மேன்மைக் கோதையம் பதிவாழி
நேய வாழவந்தி நாட்டில்
பிள்ளைக்கரை யாற்றூர் நெறிவாழி ! 356

## கவிஞர் வேலப்பன் இயற்றிய
## திங்களூர் அப்பச்சிமார் மடம் மசரியம்மன் மாலை

சமயப் பெருமையும், இலக்கியப் புகழும், வரலாற்றுச் சிறப்பும் மிக்க திங்களூரில் சிறப்புற்று விளங்கும் அப்பச்சிமார் மடம் கொங்கு நாட்டின் பண்பாட்டுச் சின்னம். அத்திருமடத்தில் மாரய்யன், பெரியமாரய்யன், அப்பச்சிமாரய்யன் எனத் திருநாமம் கொண்டு அருள்பாலிக்கும் திருக்கோயிலில் மசரியம்மன் எழுந்தருளியுள்ளார்.

மசரியம்மன் மீது திங்களூர் காட்டுவேட்டுவர் குலத்தைச் சேர்ந்த பழனிவேல் மகன் வேலப்பன் என்ற கவிஞர் பாடியது இம்மாலை இலக்கியமாகும். முப்பது பாடல்கள் அடங்கியது இம்மாலைநூல். இறுதிப் பாடலில் ஆசிரியர்

"கொங்கில் குறுப்புநன் னாட்டில் மேவு குணதிங்களூர்
தங்கு மடத்தினில் மாரய்யன் ராக்கியணன் சன்னதியில்
எங்கள் மசரி மனோன்மணி மாலை முப்பது"

என்று குறிப்பிடுகின்றார். ஆனால் 11,20 ஆம் பாடல்கள் இருமுறை ஏட்டுச்சுவடியில் எழுதப்பட்டுள்ளன. இது ஏடு பெயர்த்து எழுதுவோர் செய்த பிழையாக இருக்கலாம். எனவே 28 பாடல்களே இப்போது கிடைத்துள்ளன.

"பக்திச்சுவை நனி சொட்டச் சொட்ட" பாடிய இப்பாடல்களில் மசரி – உமை, பார்வதி, ஈஸ்வரி, சங்கரி, கொண்டத்துக் காளி என்றெல்லாம் அழைக்கப்படுகிறார்.

விநாயகரும், முருகனும் மகன் உரிமையோடு குறிக்கப் பெறுகின்றனர். இவை சிறப்புக்குரியன.

திங்களூர் – திங்கள் நகர், சசிநகர் என்று குறிக்கப்படுகிறது. அருள்மலை குறிக்கப்படுகிறது. மாரய்யன், ராக்கியண்ணன், பூதகி ஆகியோர் குறிக்கப்பட்டுள்ளனர்.

மசரியம்மன் பாதத்தை இருபொழுது நினைப்பவர்களுக்கும், இம்மாலையைக் கற்றவர்க்கும், கேட்டவர்க்கும் இடர்கள் இல்லை என்று ஆசிரியர் கூறுகிறார். நாமும் மசரியம்மனை நினைத்து வணங்கி, இம்மாலையைப் படித்தும், படிக்கக்கேட்டும் அம்மன் அருள் பெறுவோமாக.

இப்பாடல் தொகுதிகளைப் பாதுகாத்து வைத்திருந்து ஓலைச்சுவடியை அளித்தவர் பல்லடம், காளிவேலம்பட்டி, தீரன் சின்னமலை பண்பாட்டுக் களஞ்சியம் திரு. தூரன் வேலுசாமி அவர்கள் ஆவார். ஏடு பெயர்த்து எழுதி பாடல் வடிவில் செம்மைப்படுத்தி இங்கு அளிக்கப்படுகிறது.

## மசாரியம்மன் மாலை

1. திருவளர்ந் திலங்கிய அருள்மலைவேலர் செயலதனால்
இருபோதும் திங்கள் நகரின்மா ரையனை இறைஞ்சுதற்கு
புருவமெய்ஞ் ஞானச் சுடரொளிப் பார்வை பொருந்திநித்தம்
வருவாள் திருப்பதச் செம்பொன் மசரி மனோன்மணியே

2. ஆதார மாகி அருட்சுட ராகி அனேகஉயிர்
தாதா எனவளர்ந் தோங்கிடச் செல்வம் தழைக்கவந்த
பாதாம் புயம்தரும் காரண மாம்அருள் பரஞ்சுடரே
மாதா உமையவளே செம்பொன் மசரி மனோன்மணியே

3. தருவென வளர்ந்த அருள்மலை தங்கிய சண்முகனார்
குருவையும் தந்தி முகன்தனை யும்தந்த கோமளமே
அருமறை வேதம் உயர்கிரு பாகரி அம்பிகையே
மருவுயர் காரணி செம்பொன் மசரி மனோன்மணியே

4. பந்தி தளகர்த்தர் மாரய்யன் சன்னதி பார்ப்பவர்க்கு
சிந்தனை தீதொன்றும் அணுகாச் செயலுண்டு தேசமதில்
செந்திரு வளர்ந்த மலர்ப்பதம் காட்டிச் செயல்தருக
வந்தருள் தந்திடும் செம்பொன் மசரி மனோன்மணியே

5. திங்கள் அணிகின்ற வேணிய னார்முன் திருந்தமணி
கங்கை அணிந்திடும் கொண்டத்துக் காளி கனிவுகந்தென்
பங்கில் இருந்தென்னை யாண்டிட உந்தன் பதம்தருவாய்
மங்கை உமையவளே செம்பொன் மசரி மனோன்மணியே

6. எத்திசை யெங்கும் நடுநெடுங் கும்படி ஈஸ்பரியாய்
முத்திதந் தாதரித் தென்பேர் விளங்கவும் முன்வருவாய்
புத்திமெய்ஞ் ஞானமும் வாக்கும் செயலும் பொருந்திநித்தம்
மத்திக் கோளகற்றும் செம்பொன் மசரி மனோன்மணியே

7. ஓயாமல் எப்பவும் நின்பாதம் காண உலகமதில்
தாயாய் வளர்கின்ற சங்கரி யேசிங்க வாகனத்தி
நாயேன் சடலம் கடைத்தேற உன்னருள் தாருமம்மா
மாயேஷ் பரிசத்தி செம்பொன் மசரி மனோன்மணியே

8. சூதுகள் வஞ்சனை எதிரேற்று மந்திரம் சூனியங்கள்
ஏதுவந் தாலுந்தன் பொற்பாதம் சேர்வார்க்கு இடர்வருமோ
ஓது புகழ்தந்து ரட்சித்துன் பார்வைசெய் உத்தமியே
மாதுமை யேதிருச் செம்பொன் மசரி மனோன்மணியே

9. நீள்புவி லோகத்தில் அன்பர் மனதில் நிறைந்துநின்றாய்
தாழ்வுவ ராமல் அருள்நீடும் உன்னைத் தரணிமெச்ச
ஆள்வதுன் பாரம் அடியார் மனதில் அருள்புரிந்து
வாழ்வுயர் காரணி செம்பொன் மசரி மனோன்மணியே

10. நேராய்நினைந்து மாரய்யன் பேர்சொல்லி நீறிடுவோர்
சேராது தீமை யொடுபில்லி ஏவல் விலகிவிடும்
பாராத வஞ்சனை கண்ணேறு தாழ்ந்திடப் பாருலகில்
வாராது யென்றும் செம்பொன் மசரி மனோன்மணியே

11. வருவா ருலகில் அவரவர்க்கு இசைந்த வடிவுடனே
உருவாகி ஆனந்த ஓங்கார மெய்ப்பொருள் உத்தமியே
இருபோதுன் பாதத்தை மனதில் நினைப்பவர்க்கு இடர்களில்லை
மருவாரும் சசிநகர் செம்பொன் மசரிமனோன்மணியே




Scanned with OKEN Scanner

12. தினமும் பணிவோர்க்கு அனுகூல வாழ்வும் செயல்புரிந்து
அனைவோர் பணிகொலு மாரய்யன் ராக்கியண் ணன்பதமும்
நினைவே துதிக்க அடியார்க்கு உகந்த நீதிதந்தே
மனதாகி வாழ்வுயர் செம்பொன் மசரி மனோன்மணியே

13. நெஞ்சந் தனில்உன் கிருபா கடாட்சம் நிறைந்திருந்து
புஞ்சொற் கவிகள் பிழையற ஓதப் புகழ்தருவாய்
தஞ்சமுன் பாதம் தெரிசித்த சஞ்சலம் தான்தவிர்த்து
மஞ்சுல வும்திருச் செம்பொன் மசரி மனோன்மணியே

14. பததண்டை கிண்கிணி வில்ஒட்டி யாணம் பளபளென்ன
முதல்வச்சிர தேகம் நவசித்திர ரூபம் மொழிகள்மிஞ்சி
விதிமுற்ற சோதி மணிமுத்து மாலை வெயில்ஒளிபோல்
மதியொத்த மாமுகச் செம்பொன் மசரி மனோன்மணியே

15. மாசம்மும் மாரி பொழிந்து உலகெங்கும் வாழ்ந்ததுபோல்
நேசர் மனிதர் செழித்தோங்க உன்னருள் நீடுமம்மா
பாசம் பிணித்த இருவினைத் துன்பம் பறந்திடச்செய்
வாசம் சிறந்தருள் செம்பொன் மசரி மனோன்மணியே

16. புன்மையுறாமலே போற்றித் துதித்திடும் புத்திரற்கு
கன்ம வினையில்லை முன்செய்த தீவினைக் கட்டறுப்பாய்
வன்மம்செய் பாதகர் வஞ்சனை யோரை வதைத்திடுவாய்
மன்மதன் போற்றிய செம்பொன் மசரி மனோன்மணியே

17. குரும்பை முலைச்சி சிற்றிடை வல்லி குறுநகைச்சி
கருங்குழல்த் தோகை மயில்ச்சாயல் கொண்டகண் ணாட்டியுன்னை
விரும்பித் துதிக்கப் பயமேது கர்ம வினைகளுண்டோ
வரும்பகை தீர்ப்பவளே செம்பொன் மசரி மனோன்மணியே

18. பொய்கள வுகொலை செய்மாந்தர் தன்னிடம் போயலைந்தே
கைதொழும் பாவ வினையால் மெலிந்த சுசடருக்கு
மெய்யருள் நீடுவ தெப்போதென் றேநம்பி வேண்டினன்யான்
வையக மீதுறை செம்பொன் மசரி மனோன்மணியே

19. தேவாதி தேவரும் சித்தர் செழிக்கச் செகந்தனிலே
சேவேறு சிவனிடப் பாகமும் பெற்றிடும் சேயிழையே
பாவாணர் ஓதிய நாற்கவி யென்னும்உன் பாதமலர்
வாவா எனத்தரும் செம்பொன் மசரி மனோன்மணியே

20. கற்றோர் பணிகின்ற வள்ளல்நின் பாதத்தைக் காணவில்லை
பற்றாது அகல வரந்தரும் காரணி பார்ப்பதியே
சற்றா கிலும்கனிந்து இப்பஎன் சஞ்சலம் தான்தவிர்த்து
வற்றாத சீருயர் செம்பொன் மசரி மனோன்மணியே

21. கோலம் சிறந்த மலர்சூடும் கூந்தல் குளிர்ந்தமுகம்
பாலன் தனக்கு வரந்தர வேண்டிஇப் பாருலகில்
சூலி கபாலி அபிராமி மாரி துணைபடைத்த
வால சவுந்தரி செம்பொன் மசரி மனோன்மணியே

22. எந்தாய் உமையவள் பூதத்தி பாதம் இறைஞ்சுவர்க்கு
செந்தா மரைப்பாதம் தந்தா தரித்துச் செயல்தருவாய்
சந்தான மும்சவு பாக்கியமும் ஈந்து தயவுகந்தே
வந்தா தரித்திடும் செம்பொன் மசரி மனோன்மணியே

23. நிறையே துலங்கச் செயல்தரு வாய்இந்த நீணிலத்தில்
கறைதீரும் செல்வக் குறுப்புநன் னாட்டிலே கதித்தெழுக
துறைதெரிந் தர்ச்சனை செய்வோர்க்கு மேன்மை சுகந்தருவாய்
மறையோர்கள் போற்றிய செம்பொன் மசரி மனோன்மணியே




Scanned with OKEN Scanner

24. தண்டமிழ்ப்பாவாணர்க்கு இசைந்தருள் நீடும் தயாபரியே
கண்டனை வோர்தொழ நாவலந் தீவுறை காரணியே
எண்டிசை தங்கிய பொற்பாதம் காண இயல்தருவாய்
மண்டலம் மீதுறை செம்பொன் மசரி மனோன்மணியே

25. தாழை கமுகு பலாவாழை தென்னையும் சண்பகமும்
சூழும் குறுப்புநன் னாட்டில் வாழுமுச் சுடரொளியே
நாளும் குளிர்ச்சியும் சூழ்ந்திடத் திங்கள் நகர்தனிலே
வாழும் சிவசக்தியே செம்பொன் மசரி மனோன்மணியே

26. அப்பச்சி மாரய்யன் மெய்ப்புள்ள ராக்கி யண்ணனுடன்
நட்புள்ள பூதத்தி யாயிதன் பாதமும் நாடிடவே
மெய்ப்புள் ளனைவரும் நீடுழி காலம் விளங்கிடவே
வைப்புற்று நீடிடும் செம்பொன் மசரி மனோன்மணியே

27. நாட்டும் புகழ்கொங்கு நாட்டினிலே திங்கள் நகர்தனிலே
காட்டுக் குலேந்திரன் வேலப்பன் ஈன்ற கனகரத்தினம்
நீட்டு பழனிவே லேந்திரன்சொல் வேலப்பன் இதயமென்றும்
வாட்டமில் லாமல்செய் செம்பொன் மசரி மனோன்மணியே

28. கொங்கில் குறுப்புநன் னாட்டிலே மேவு குணதிங்களூர்
தங்கு மடத்தினில் மாரய்யன் ராக்கியணன் சன்னதியில்
எங்கள் மசரி மனோன்மணி மாலை முப்பதும்தான்
இங்கித மாகவே கேட்டோர்கற் றோருக்கு இடர்இலையே !

## சிங்கநல்லூர் அப்பச்சிமாரய்யன் கோயில் "கீர்த்தி விருத்தங்கள்"

1. அப்பச்சிமாரய்யன் விருத்தம்
2. ராக்கியண்ணன் விருத்தம்
3. மசரியம்மன் விருத்தம்

### அப்பச்சிமாரய்யன் பேரில் விருத்தம்

1. நீர்கொண்ட தாரணியில் உயர்கின்ற நல்லோர்கள்
நேயமுட னேதழைக்க
நீதிசேர் சதுர்வேத நெறிமுறைகள் தவிராது
நிறைவாக வேசெழிக்க

வார்கொண்ட அலங்கிருத சந்தன களபமொடு
மான்மதம் திமிர்ந்துமேலாய்
வளரிளங் கொங்கையர்கள் கற்புநிலை மாறாத
வரிசையுற்று இலங்கநன்றாய்த்

தார்கொண்ட புயகைத் தலத்தில்வை வேலுற்ற
தற்பரா ஒப்பிலாத
சரசநய புனிதவித ஏரழகு கமலபதத்
தருணஅருள் சொரியுமுகிலே

ஆர்கொண்ட கருணால யத்தனே சிங்கநகர்
ஆதியே மந்திரமுறையால்
அர்ச்சிக்கும் மாதவர் களுக்கிச்சை வாழ்வுதரும்
அப்பச்சி மாரய்யனே !

---

இப்பாடல்களில் அப்பச்சிமாரய்யன் முருகன் அவதாரமாகவே புகழப்படுகிறார். வேலாயுதம் குறிக்கப்படுகிறது (1,2) கோலக் கலாப மயில்மேல் எழுந்தருளுதல் கூறப்படுகிறது (3), சூரனை வென்றமை குறிக்கப்படுகிறது (4), 'வேலன்' என்றே புகழப்படுகிறார் (6), குன்றுதோறாடல் கூறப்பட்டுள்ளது (10).




Scanned with OKEN Scanner

2. பூரணமெய்ஞ் ஞானசக லாகம புராணகலை
போதஅருள் நாதஒலியே
பூதலமெ லாம்மகிழ வேமகிமை தானுதவு
பூவடி வினோதபுனிதா

சூரணியும் மூடமெனும் மாவிருள்கள் ஓடவெகு
தூயவொளி நீடும்உசிதத்
துய்யனே புலவர்க்கு மேலான தெய்வமே
சூட்சாதி சூட்சவடிவே

ஏரணியும் உறுபார சத்திவேல் கைத்தலத்து
இசையுடன் எடுத்துமாற்றார்
இடர்கள்பட் டுத்திடுக் கிட்டுசெருக்கு அற்றிறந்து
இடர்செய் யும்விலாச

ஆரணவொய் யாரனே சிங்கநல் லூரில்வளர்
ஆதியே சொர்ணமலர்கள்
அர்ச்சிக்கும் மாதவர் களுக்கிச்சை வாழ்வுதரும்
அப்பச்சி மாரய்யனே !

3. மருவுலவு நெடுநேமி தனையுற்று நின்றபூ
மண்டல கடாகமுழுதும்
மாற்றாம லேகாட்சி யாகச் சுமக்குமோர்
மாசுணத் தைச்சினந்து

குருமணி துலங்குமிக் கனமுடியோ ராயிரம்
குமிறிடக் கூர்வாயினில்
கொத்திப் பறந்தேறு சித்திரச் செழுஞ்சரச
கோலக் கலாபமயில்மேல்

பரிவுலவு சரசகிண் கிணிகள்ஒலி பெருகிப்
பரிநடன மிட்டுநல்ல
பற்றுற்ற முப்பத்தி ரண்டறச் சாகப்
பதியில்வீற் றிருக்குமிறைவா

அருள்உலவு சிங்கநல் லூரில்வளர் தேவனே
அன்பெனும் கமலமலர்கள்
அர்ச்சிக்கும் மாதவர் களுக்கிச்சை வாழ்வுதரும்
அப்பச்சி மாரய்யனே !

4. அண்டபகி ரண்டமுழு தும்சட சடவென்று
அதிர்ந்திட அகண்டவாயால்
ஆர்ப்பரித்து ஆயிரம் முடிப்பெருஞ் சேடனார்
அவதிபட் டுடல்நெளியச்

சண்டமா ருதம்வெருவி நடைதளர்ந் தோடிச்
சலித்துத் தியக்கமாக
தான்நடன மிட்டுமின் னல்கெட விளங்குவான்
தான்பிடித்த திண்யமார்பா

தொண்டருக்கு இடையூறு செய்துஅறம் ஒழிந்திடத்
தொடர்ந்து செயங்கொண்டார்ந்த
சூரசங் காரகெம் பீரசிங் காரனே
சோர்விலா ஞானமுதலே

அண்டர்பணி பாதனே சிங்கநல் லூரில்வளர்
ஆதியே பாடல்முறையால்
அர்ச்சிக்கும் மாதவர் களுக்கிச்சை வாழ்வுதரும்
அப்பச்சி மாரய்யனே !




Scanned with OKEN Scanner

5. கொலைகளவு வஞ்சனை யெனுஞ்செருக் குறுமுதிர்
கொடும்பவத் தோர்கள்தம்மை
சுவர்வாளி லேகுத்தி நெஞ்சைப் பிளந்துநீள்
குடலைப் பிடிங்கியேதான்

வலமுலவு பூதபேய் தாம்அறிந் தச்சனம்
மகிழ்வினொடு புரியுமுதல்வா
வாசங் கலந்தினிய களபந் திமிர்ந்ததிக
மான்மதம் கொண்டுமதமாய்

இலகொளி வளைகளும் உயராரஞ் சுமக்கின்ற
இளமுலை மடந்தையர்மேல்
இன்புற் றிருந்துன்னை அன்புற் றிரந்திடா
ஈனர்க்கு மகிமைவருமோ

அலகிலாப் புகழ்கொண்ட நாதனே சிங்கநகர்வாழ்
அண்ணலே உற்றமலர்கள்
அர்ச்சிக்கும் மாதவர் களுக்கிச்சை வாழ்வுதரும்
அப்பச்சி மாரய்யனே !

6. இரவிபல கோடிஒரு உருவெடுத் தாலென்ன
இன்னுரு எடுத்துமிக்க
இகல்கொண்ட பஞ்சமா பாதகம் எனும்கொடிய
இருளைக் கடிந்துநெடிய

நிரையான சீருற்ற அருள்அறங் கருணையால்
நீணிலம தெங்குமுதவி
நிச்சயம தாகவே உற்றபுல வோர்கல்வி
நேயங்க ளாகியோங்க

புரிவாக வேவந்த சித்திரவை வேலனே
பூரணா உயர்காரணா
புவனமதில் இருவகை தோற்றத்தி னுட்பரவு
புனிதவித உசிதசரச

அரியபத கமலனே சிங்கநல் லூரில்வளர்
அய்யனே ஞானமுறையால்
அர்ச்சிக்கும் மாதவர் களுக்கிச்சை வாழ்வுதரும்
அப்பச்சி மாரய்யனே !

7. ஏர்கொண்ட மறமன்னர் முடியுறள மெய்தாள
எனச்செய்வ மென்றுநெடிய
இகல்செய்ய ஒருவரும்அகலாது நிழல்இருந்
திட்டதைத் தேய்த்துவெற்றிச்

சீர்கொண்ட யானையோர் கூடலெனச் சூரியன்
தேரைப் பழித்துயர்ந்த
சேமநிலை யாகிமருள் செய்துகளி கூரவரு
தேருமொரு விதமிதென்னப்

பார்கொண்ட சக்கரவா ளஞ்சுழல் நடைகொண்ட
பரியுமோர் கடலிதென்ன
பதாக்கியமோர் கடலென்ன நால்வகைப் படைகொண்ட
பாதனே நாதகீதா

ஆர்கொண்ட வேல்கொண்ட கையனே சிங்கநகர்
அண்ணலே நியமமுறையால்
அர்ச்சிக்கும் மாதவர் களுக்கிச்சை வாழ்வுதரும்
அப்பச்சி மாரய்யனே !




Scanned with OKEN Scanner

8. முத்திக்கு வித்தான வள்ளலே பேரண்ட
மூதண்ட கூடநிலையாய்
மோனவடி வாய்நின்ற ஞானமுத லேசிந்தை
மூடஇருள் ஓடவந்த

சுத்தனே கர்த்தனே அற்புதா பொற்பதா
சொற்சுசீ லத்தனேநீள்
தூயனே நேயனே தேவனே நாதனே
சோதியே நீதியான

வித்தகா நிற்குணா தற்பரா ஒப்பிலா
விறல்மிக்க கொற்றமீறும்
வீராதி வீரனே யோரா வினோதனே
மேலோர்கள் மேலாகவாழ்

அத்தனே பத்திசேர் சிங்கநல் லூரில்வளர்
அய்யனே துய்யமலர்கள்
அர்ச்சிக்கும் மாதவர் களுக்கிச்சை வாழ்வுதரும்
அப்பச்சி மாரய்யனே !

9. பேய்பில்லி சூனியம் கண்திட்டி தோஷமொடு
பெரிதான பாதகங்கள்
பிரிவுற்ற குட்டம் மண்டைப்புற் றுடன்பண்டு
பேணாத வட்டகாசு

நோய்விக்கல் அன்னபல தோஷம்வலிப் புச்சுரம்
நுவலுநாப் புற்றிலுப்பு
நோக்கரிய காமாலை யும்சுவாச நிசுவாச
நோன்மைசெய் கண்டமாலை

பாய்சின ஷாடங்கள் முதுகுப் பிளவைசன்னி
பவுத்திர மகோதரஞ்சொல்
பகருமிப் படியான நோயெலாம் தீரும்நின்
பதமலர்கள் கண்டவுடனே

ஆய்தமிழ் விலாசனே சிங்கநல் லூரில்வளர்
ஆதியே மந்திரமுறையால்
அர்ச்சிக்கும் மாதவர் களுக்கிச்சை வாழ்வுதரும்
அப்பச்சி மாரய்யனே !

10. மகிமைபெறு மாறுறு தத்துவமு மாகியதில்
மாற்றரிய பொருளுமாகி
வாழ்கின்ற மூர்த்தியே குன்றுதோ றாடல்செயும்
வள்ளலே சமரவைவேல்

இகலொடு பிடித்தவர் வச்சிரதந் தம்குளிகண்
இருள்வடிவும் இவைபொருந்தும்
ஈராயி ரம்கோடி பூதம்இரு புறம்சூழ
எண்டிசை பாலர்போற்ற

புகலரிய முப்பந்து முக்கோடி தேவர்இரு
பொன்னடிச் சேவை செய்ய
பூமியந் திரமதிர நீடுதுந் துமியொலி
புடைத்தெழுந் தார்ப்பநன்றாய்

அகமகிழ் விலாசனே சிங்கநல் லூரில்வளர்
அண்ணலே அன்புபெருகி
அர்ச்சிக்கும் மாதவர் களுக்கிச்சை வாழ்வுதரும்
அப்பச்சி மாரய்யனே !

## ராக்கியண்ணன் பேரில் விருத்தம்

1. சீர்பரவும் அகரமுதல் அன்பத்தோ ரக்கரமாய் சேர்ந்திருந்து
பேர்பரவு மைம்பூதத் தொகுதியுமாய் அமர்ந்திருந்து பேசுஞான
வோர்பரவும் ஆதிபனே சிங்கநல் லூர்க்கரசே இனிமையான
தேர்பரவும் அதியவித ராக்கியண்ண னேசரச தேவர்கோவே !

2. மனமதனில் ஆங்கார விதக்குறும்பு மிகுந்தெழுந்த மாற்றலார்கள்
முனைபதற அவர்கள்மணி முடியுருள அமர்புரியும் மூர்த்திநீயே
உனைநினைக்கும் அடியார்கள் கேட்டவரம் மேன்மேலும் உறுதியாகத்
தினம்உதவ வரும்உசித ராக்கியண்ண னேசரச தேவர்கோவே !

3. யானைபரி தேர்கடல்போல் மிக்கபதா தியும்நிறைவ தாகத்தோன்றி
வானகமண் ணகமெங்கும் பார்த்திடும்மெய்ப் படைசூழ வருமொய்யாரா
தானவரை வேரறுக்கும் வாள்வீரா சிங்கநல்லூர் தன்னில்வாழ்வே
தேனுலவும் கமலபத ராக்கியண்ண னேசரச தேவர்கோவே !

4. மறமிகுந்து வருகின்ற மாற்றார்கள் முடியுருள மணித்தேர்ஏறி
விறல்மிகுந்த வேல்வாள்வில் எடுத்தமர்க ளேபுரியும் விமலனேநீள்
நறைமிகுந்த மலர்மார்பா நல்லோர்க்கு அருள்பொழியும் நாதகீதா
திறல்மிகுந்த கமலபத ராக்கியண்ண னேசரச தேவர்கோவே !

## மசாரியம்மன் பேரில் விருத்தம்

1. சங்கரியே அம்பிகையே தண்டமிழ்கள் போற்றுகின்ற
இங்கிதமே சுந்தரியே சடாட்ச ரப்பொருளே
தங்கமக மேரனைய சன்னாசி போற்றுகின்ற
மங்கலையே சிங்கநல்லூர் வளர்மசாரி மாதாவே !

2. மணியுலவு நாகநகர் மாமுனிவர் தேவர்புகழ்
குணமயிலே மேலான கோலா கலப்பொருளே
பணியுலவு நெய்சடாப் பார்மின்னே சோலைமலர்
மணமுலவு சிங்கநல்லூர் வளர்மசாரி மாதாவே !

3. உனைமனதி லேதுதிக்க உண்மைவர மேயுதவா
தீனமெனதாம் இசமுனைவே றனிவலசா மிகளுளதோ
கனிமொழியே நவமணியே கடலமுதே திரிபுரையே
வனமயிலே சிங்கநல்லூர் வளர்மசாரி மாதாவே !

4. காரணியே நாரணியே காரிகையே ஞானமுயர்
பூரணியே தேவர்புகழ் புண்ணியமே பெண்ணரசே
சீரணியே நான்மறையே தேமொழியே யாமளையே
வாரணியே சிங்கநல்லூர் வளர்மசரி மாதாவே !

5. கன்னியே நன்னயமே கண்மணியே பன்னரிய
மின்னொளியே யாயிழையே வேதாந்தத் துட்பொருளே
பொன்னே நவரசமே பூங்கொடியே யாங்கார
வன்னியே சிங்கநல்லூர் வளர்மசரி மாதாவே !

## வாழி

கார்வாழி சிங்கநல்லூர் அப்பச்சி மாரயன்தாள் கமலம் வாழி
ஏர்வாழி விறல்கொண்ட ராக்கியண்ண மாதேவன் இசையும் வாழி
பார்வாழி மசரியம் மன்வாழி மறைவாழி பரிவுகூர்ந்து
சீர்வாழி பூவுலகெல் லாம்வாழி நன்றாய்ச் சிறந்துதானே !

(ஈரோடு அரசு அருங்காட்சியகத்தில் இந்த ஏட்டுச்சுவடி உள்ளது. எண்.75/89)

பிற்சேர்க்கை – 3

## திங்களூர் அப்பிச்சிமாரய்யன் கோயில்

பக்திச் சிறப்புடைய கண்ணப்ப நாயனாரைக் குல முதல்வராகவும், காளத்தி மலைக்கு உரியவர்களாகவும் கூறப்படும் வேட்டுவ சமுதாயத்தினர் கொங்கு நாட்டின் பூர்வ குடிகளில் ஒருவர் ஆவர். 'கொங்கர்' என்று அவர்களைக் குறிப்பிடும் பண்டைய ஆவணங்கள் அவர்கள் குலத்தலைவரைக் 'கொங்குராயன்' என்று கூறுகின்றன. அவர்களில் பலர் 'ஊராளி', 'நாடாள்வார்' எனக் குறிக்கப் பெறுகின்றனர். 'சோழன் பூர்வ பட்டயம்' வேட்டுவர்களை 'ஆதிக்குடிகள்' என்று கூறுகிறது.

வேட்டுவ சமுதாயத்தினரைக் கொங்கு வேளாளர்கள் 'குருகுலத்தார்' என்றும் 'வாளரசமணவாளர்' என்றும் குறித்ததோடு 'பாதிப்பங்காளிகள்' என்றும் சிலர் அழைத்தனர். அண்ணன்மார் காவியத்தில் 'கும்பிட்டாரை வெட்டாத குருகுல வம்சம்' என்ற தொடர் காணப்படுகிறது. வேளாளர் - வேட்டுவர் இடையே எழுந்த சில பூசல்கள் காட்டை நம்பி வாழ்ந்த வேட்டைக்கும் - நிலம் திருத்தும் வேளாண்மைக்கும் ஏற்பட்ட தொழில் பூசலே தவிர சாதிப்போராட்டம் அல்ல.

இரு சமூகத்தினரும் இணைந்து பல அறச்செயல்கள் கொங்கு நாட்டில் ஆற்றியதைக் கல்வெட்டுகளும், செப்பேடு பட்டயங்களும் எடுத்துக் காட்டுகின்றன. சங்க காலம் முதல் தொடர்ந்த வரலாற்றுப் பெருமையும் சிறப்பும் உடையது வேட்டுவர் சமுதாயம். வேட்டுவ சமுதாயத்தின் வீரமும் ஈரமும் உள்ள தலைவரே அப்பச்சிமாரய்யன்.

## அப்பச்சிமார் கோயில்கள்

கொங்கு வேளாளர்கள் தங்கள் குல முன்னோரான பொன்னர் – சங்கர் ஆகிய அண்ணன்மார், இராசாசுவாமி ஆகியவர்களைத் தெய்வமாக வணங்குவது போல வேட்டுவர் சமுதாயத்தினரும் தங்கள் குல முன்னோராக வாழ்வாங்கு வாழ்ந்து வான் உறையும் தெய்வத்துள் வைக்கப்பட்ட அப்பச்சிமாரய்யனைத் தெய்வமாக வழிபட்டு வருகின்றனர்.

குறுப்பு நாட்டுத் திங்களூர், சிங்கநல்லூர் ; மேல்கரைப்பூந்துறை நாட்டு ஈஞ்சம்பள்ளி, பேரோடு ; கீழ்க்கரைப் பூந்துறை நாட்டு ஓடப்பள்ளி, பிரிதி ; ஏழூர் நாட்டு முசிரி ; கீழ்க்கரை அரைய நாட்டுத் திடுமல் ஆகிய பல ஊர்களில் அப்பிச்சிமாரய்யன் கோயில்கள் உள்ளன. வேட்டுவர் சமுதாயக் கோயில்களில் அப்பிச்சிமாரய்யன் கோயிலே வரலாற்றுச் சிறப்புடையதாகும்.

கோயமுத்தூர் மோளபாளையம் பூலுவபட்டியில் கொங்கு வேளாளர் பவளகுலத்தார் அப்பச்சிமார் இராக்கியண்ணருக்குக் கோயில் கட்டிக் குலதெய்வமாக வழிபடுகின்றனர். துக்காச்சி மணியன்குலத்தார் இராக்கியண்ணன் சுவாமியை வணங்கி வருகின்றனர். பொங்கலூர் நாட்டு நமனாரியில் அப்பச்சிமாரய்யன் சின்ன மடமும், கோயிலும் உள்ளது.

## அப்பிச்சிமாரய்யன் வரலாறு

'அப்பிச்சிமார் காவியம்' என்ற இலக்கியம் இவரது வரலாற்றை விரிவாகக் கூறுகிறது. கொங்கு 24 நாடுகளில் ஒன்றான வாழவந்தி நாட்டுப் பிள்ளைக்கரையாற்றூர் என்ற ஊரில் மாரய்யன் நல்லாட்சி புரிந்து வந்தார். ஏழைகளை ஆதரித்து, இரவலர்க்கு ஈந்து, புலவரைப் போற்றி, மக்களைப் பாதுகாத்துச் செங்கோலோச்சிய மாரய்யன் புலிக்கொடியுடன், வாகை மாலை புனைந்து அரசு செலுத்தினார். அவர் வேட்டுவர் சமுதாய உசர குலம் சார்ந்தவர். உசர குலம் உயரகுலம் என்றும், உயர்குடி குலம் என்றும் அழைக்கப்பெறும்.

அவருக்கு நான்கு தம்பியர், அவர்கள் சின்ன மாரய்யன், பிள்ளை மாரய்யன், உத்தண்டராயன், ஆவுடையான் ஆகியோர் ஆவர். அமைச்சர் கற்பகத்தான், போர்க்கலை வல்ல வீரமிக்க வேட்டுவர் சமுதாயம் பட்டாலி குல ராக்கியண்ணன்,

புலமையுடைய சிங்கக் கவிராசன், காவலர்களாகத் தனுக்காமன், பாதருகார் எனும் அரசமக்கள் ஆகியோர் அத்தாணி, மண்டபத்தில் வீற்றிருந்து அரசுக்கு உதவினர். கொங்கு வேளாளர்களில் பயிரகுல நல்லசாமனும், சாத்தந்தை குலச் சிவகுருநாதன் மகன் அர்த்தனாரியும், அவர் மனைவி மெய்யாண்டாயி ஆகியோரும் அவையில் இருந்தனர் என்பது சிறப்புக்குரியது. மாரய்யன் பெரிய மாரய்யன் என்று அழைக்கப்பட்டார்.

சகோதரர்கள் ஐவருக்கும் ஆண் மக்கள் எழுபது பேர். பெரிய மாரய்யனின் மூத்த மகன் பழனியப்பனுக்குக் கீரம்பூர் காட்டு வேட்டுவர் குல நாகமலையின் அண்ணன் பொன்னய்யன் மகள் காளியம்மையைத் திருமணம் செய்ய முனைந்தனர்.

பழனியப்பன் "நான் மட்டும் தனியாகத் திருமணம் செய்து கொள்ள மாட்டேன். நாங்கள் சகோதரர்கள் எழுபது பேரும் ஒன்றாகத் திருமணம் செய்து கொள்வதாகச் சத்தியம் செய்துள்ளோம்" என்றார்.

கீழ்க்கரைப் பூந்துறை நாட்டுக் காவிரிக்கரை ஒடப்பள்ளி வேட்டுவர் பலர் வாழும் பேரூர். ஆகையால் அங்கு சென்று பெண் கேட்டனர். அங்கு அரிச்சந்திர வேட்டுவர், காட்டு வேட்டுவர், புல்ல வேட்டுவர், புன்னாடி வேட்டுவர், பொன்ன வேட்டுவர், மணிய வேட்டுவர், வேந்த வேட்டுவர் குலம் சார்ந்த 11 பேர் வீட்டிலிருந்த 70 பெண்களை மணம் பேசினர். பெண் பேசி முடிப்பதில் சாத்தந்தைகுல அர்த்தனாரி மனைவி (மெய்யாண்டாயி) பெரும் பங்கு வகித்தார்.மணம் குறித்த நாளில் மணமக்களுக்குக் கங்கணம் கட்டிச் சுபச் சடங்குகள் முடித்து பெரியமாரய்யன் குழுவினர் அனைவரும் விருந்துண்டு மகிழ்வாக ஒடப்பள்ளியில் இருந்தனர்.

தென் பூவாணி நாட்டில் ஆவணிப் பேரூரைத் தலைமை இடமாகக் கொண்டு பூவாணி வேட்டுவரில் போத்திராயன் என்பவர் ஆண்டு வந்தார். அவருக்கும் பூந்துறை நாட்டார்க்கும் பகை மூண்டு போர் நடந்து பூந்துறை நாட்டார் தோல்வியடைந்து பெரும் சேதத்துக்கு உள்ளாயினர். பலர் மரணடைந்தனர் . பலர் படுகாயமடைந்தனர்.

பூந்துறை நாட்டார் சார்பில் போர்க்குறிக் காயத்துடன் ஒரு வீரர் வந்து "பெரிய மாரய்யனே அடைக்கலம், அபயம்" என்று கூறி நடந்தவற்றைக் கூறினார். "மலைபோல் யாம் இருக்க இவ்வாறு நேரலாமா?" என்று கூறிய பெரியமாரய்யன் குழுவினர் அனைவரும், 70 மணமக்கள் உட்படத் தங்கள் படையுடன் போருக்கு எழுந்தனர். ஆலத்தூரில் பெரிய மாரய்யன் படையினர் அனைவரும் வீர மரணம் அடைந்தனர். காயம்பட்ட பெரிய மாரய்யன் போத்திராயனைக் கொன்று தானும்




Scanned with OKEN Scanner

அர்த்தநாரீசுவரர் அருள் பெற்று அமரர் ஆனார். 70 மணமக்களில் சிலர் இறக்க, மற்றவர்கள் இனி நாமும் வாழ்வதில்லை என்று போரிட்டு அனைவரும் மடிந்தனர்.

இதை அறிந்த 70 மணப்பெண்களும் கங்கணம் கட்டித் திருமணச் சடங்குகள் முடிந்துள்ள நிலையில் இனி நாம் வேறொருவரை மணம் செய்வதில்லை என்ற துணிவுடன் காப்பறாமலையின் மேல்புறம் காணாச்சுனை என்னும் சுப்பிடாச்சுனை அருகில் பெரிய குழி தோண்டிக் கட்டைகளை அடுக்கித் தீ வளர்க்க வேண்டும் என்றும் தாங்கள் அனைவரும் ஒன்றாகத் தீக்குழி பாய்ந்து வீரமாத்திகளாக முடிவு செய்திருப்பதாகவும் தங்கள் பெற்றோர்களிடமும் சகோதரர்களிடமும் கூறினர். அவ்வாறே அவர்களும் செய்தனர்.

எழுபது பெண்களும் போர்க்களம் சென்று தங்களுக்கு நிச்சயித்த மணமகனின் தலையைத் தேடி எடுத்து ஒரு தட்டத்தில் ஏந்தி அடுத்த பிறவியில் தாங்கள் கணவன் மனைவியாக அனுக்கிரகிக்க வேண்டும் என்று திருச்செங்கோட்டு அர்த்தநாரீசுவரரை நோக்கி வேண்டி நெருப்பில் குதித்த அனைவரும் வீரமரணம் எய்தினர்.

பிற்காலத்தில் வேட்டுவர் சமுதாயத்தினர் பெரிய மாரய்யனை "அப்பச்சிமாரய்யன்" என்று கோயில் கட்டி வணங்கினர். திங்களூரிலும் கோயில் கட்டினர். 'அண்ணன்மார்' என்பது போல 'அப்பச்சிமார்' என்று அழைப்பது வழக்கம். அப்பச்சிமாரய்யன் "வீரமிகு ரணசூர அப்பச்சிமாரய்யன்" என்று போற்றப்படுகிறார். அப்பச்சிமாரய்யனை அப்பிச்சிமாரய்யன் என்றும் அழைப்பர்.

**திங்களூர்க் கோயில்**

கொங்கு நாட்டு அப்பச்சிமாரய்யன் கோயில்களில் திங்களூர்க் கோயில் பெருமையும் புகழும் சிறப்பும் மிக்கதாகும். இக்கோயில் குறுப்பு நாட்டுத் திங்களூரின் வடமேற்கில் சுமார் 1.5 கிலோ மீட்டர் தொலைவில் பரந்த இடத்தில் விசாலமாக அமைந்துள்ளது.

இக்கோயில் அமைந்துள்ள இடத்தை 'அப்பிச்சிமார் மடம்' என்றே மக்கள் அழைக்கின்றனர். இலக்கியங்களும் அவ்வாறே கூறுகின்றன.

கொங்கு மண்டல சதகம்,

"அப்பிச்சிமார் மடங்கொண்டு வண்புகழ் கொண்டது கொங்கு மண்டலம்" என்று கூறுகிறது. அவினாசிப் புலவர் தாம் பாடிய திங்களூர் அருள்மலை நொண்டி நாடகத்தை,

"மாரய்யன் மடப்பதியில் சென்று – அப்பிச்சி

மாரய்யனைப் போற்றியே வித்

தாரமாகத் தொழுதேன்"

என்று கூறுகிறார். திங்களூர் வேட்டுவரில் காட்டுக்குல வேலப்பன்,

"கொங்கில் குறுப்புநன் னாட்டில் மேவு குணதிங்களூர்

தங்குமடத்தினில் மாரய்யன் ராக்கியண்ணன் சன்னதியில்"

தாம் மசரியம்மன் மாலை பாடியதாகக் கூறுகிறார். மற்றொரு விருத்தப்பாடல்

"சந்திரபுரி மாநகரில் இந்திரஓ லக்கமாய்

தழைத்திட விளங்கு மடமாம்

தண்டமிழ்க் கவிவாணர் கொண்டாட வேவந்த

சற்சங்க மான மடமாம்

விந்தையுட னேமுனிவ ரானமதி யோர்களும்

மெய்ப்பாய் விளங்கு மடமாம்

வீரமிகு இரணசூர அப்பிச்சி மாரய்யன்

வீற்றிருக்கின்ற மடமாம்

கொந்துலவு குலமாதர் சிந்துநட னம்பரவு

கொலுஅலங் கார மடமாம்

கூறரிய கொங்குமலை யாளமும் ஈழமும்

கொண்டாட வந்த மடமாம்

அந்தமிக வாகவே பழனியய் யன்நீதி

அர்ச்சனைகள் செய்யும் மடமாம்

அம்புவியில் மெய்ப்பான அப்பிச்சி மாரய்யன்

அன்னந்தந்து உதவும் மடமே"

என அப்பிச்சிமார் மடத்தின் பெருமைகளையெல்லாம் பலபடத் தொகுத்துக் கூறுகிறது.

திங்களூர்க் கோயிலில் அப்பச்சிமாரய்யன், இராக்கியண்ணன், மசரியம்மன் ஆகியோர் எழுந்தருளி அருள் பாலிக்கின்றனர். பல்வேறு குலங்களைச் சேர்ந்த கொங்கு நாட்டு வேட்டுவர் சமுதாயத்தினரும், கொங்கு வேளாள சமூகத்தினரும், பிற சமூகத்தினரும் உசர வேட்டுவர்குல அப்பச்சிமாரய்யனையும், பட்டாலி





Scanned with OKEN Scanner

வேட்டுவர்குல இராக்கியண்ணனையும் வணங்கி வழிபட்டாலும் திங்களூர்க் காணிக்கு உரிய காட்டுவேட்டுவர் குலப் பட்டக்காரர் குடும்பத்திற்குரிய தனிப்பட்ட கோயிலாகவே இது விளங்குகிறது.

பட்டக்காரராகப் பட்டம் கட்டப்பட்டவர்கள் தான் இக்கோயில் சன்னதிகளில் உள் சென்று பூசை செய்ய வேண்டும் என்பது மரபு. பட்டம் சூட்டிக் கொண்ட பட்டக்காரர்கள் பிற இடங்களில் உண்ணக் கூடாது : தண்ணீர்கூடக் குடிக்கக் கூடாது என்பன போன்ற பல கட்டுப்பாடுகள் கடுமையாக விதிக்கப்பட்டிருக்கின்றன. எனவே பட்டம் கட்டிக் கொள்ள உரியவர்களாக இருந்தும் வாரிசுதாரர்கள் பட்டம் சூட்டிக் கொள்ளவில்லை. அதனால் கோயில் உள்சென்று பூசை செய்யும் நிலை இல்லாத காரணத்தால் கோயில் கருவறைச் சன்னதிகள் பூட்டியே உள்ளன. பட்டத்துக்கு உரிய வாரிசுதாரர்கள் மட்டும் கோயிலைத் தூய்மை செய்யவும், திருவிளக்கு ஏற்றவும் கோயிலின் கருவறை நிலைவரை உட்செல்வர். பிறர் எவருக்கும் செல்ல அனுமதியில்லை. எனவே வழிபாடுகள் அனைத்தும் சன்னதி முன்பு வெளியிலிருந்தே நடத்தப்படுகின்றன.

மக்கள் கோயிலுக்கு நெல்லும், பிற தானியங்களையும், பயிறு வகைகளையும் கொடையாக அளிப்பர். முன்பு கோயில் எருதுகளின் முதுகில் பையைத் தொங்கவிட்டு ஊருக்குள் அனுப்புவர். மக்கள் அங்கும் தானியத்தைக் கொடையாக அளிப்பர்.

சிவராத்திரி போன்ற நாட்களில் இங்கு வரும் பக்தர்கட்கு நெல் அளிக்கப்படும். நெல்லைக் குற்றி அரிசியாக்கிப் பொங்கல் வைக்க முப்பதுக்கு மேற்பட்ட கல் உரல்களும், ஐம்பதுக்கு மேற்பட்ட உலக்கைகளும் கோயிலில் உள்ளது சிறப்புக்குரியதாகும். பக்தர்கள் பொங்கல் வைத்து முறத்தில் இலை போட்டுப் பொங்கலை அதன்மீது பரிமாறி முறத்தைத் தலைமீது வைத்துக் கொண்டு வழிபடுவர். பொங்கலையும் பிரசாதங்களையும் உண்பவர்கள் மீதி எதையும் வீட்டுக்கு எடுத்துக் கொண்டு செல்லக்கூடாது. கோயிலில் பெறும் விபூதியைக் கூடக் கொண்டு செல்லக் கூடாது என்பது இங்கு கடைப்பிடிக்கப்பட்டு வரும் வழிவழி மரபாகும்.

அமாவாசை, சிவராத்திரி, கார்த்திகை தீபம் போன்ற விசேட நாட்களில் கோயிலில் பெரும் கூட்டம் கூடும். கொங்கு வேளாளர்களும் பெருவாரியாகக் கலந்து கொள்வர். மக்கள் கால்நடைகளையும் கோயிலுக்குக் கொடையாக அளிப்பர். விரும்பும் பக்தர்கள் எந்த நாளிலும் கோயில் திறக்கும் நேரங்களில் வந்து வழிபடலாம். அதற்குத் தடையில்லை. திங்கள், வெள்ளிக்கிழமைகளில் பலர் வந்து வழிபடுகின்றனர்.

அப்பிச்சிமாரய்யன் கொலை, களவு, வஞ்சனை செய்வோரைத் தண்டிப்பார். பேய், பிசாசு, பில்லி, சூனியம், கண்ணேறு , சகல தோஷம் இவைகளையும், அனைத்து நோய்களையும் நீக்கிச் சுகம் தருவார் என்ற நம்பிக்கையில் ஏராளமானவர்கள் வந்து வழிபடுகின்றனர். வேண்டிய பக்தர்கள் வேண்டிய பலன்களைத் தாம் வேண்டியவாறே பெறுகின்றனர்.

"பந்தி தளகர்த்தர் மாரய்யன் சன்னதி பார்ப்பவற்கு
சிந்தனை தீதொன்றும் அணுகாது"

"நேராய் நினைந்து மாரய்யன் பேர்சொல்லி நீறணிந்தால்
சேராது தீமை பில்லி சூனியம் விலகிவிடும்"

என்பது அப்பிச்சிமாரய்யன் பக்திப்பாடல் பகுதிகளாகும்.

அப்பச்சிமார் காவியத்தில் மாரய்யன் புகழ்பாடும் பாடல்களில் ஒன்று.

"வாகு வலயமும் சரப்பணியும்
வாகைத் தாரும்பொன் மாலிகையும்
நாகம் அனையபொற் புயத்தினிலும்
நளின நுதலிலும் திலகம் துலங்க
கோகனக மார்பு மணிமார்பும்
குளுந்த முகமும் திருமார்பும்
போக தேவேந்திரன் இவன்எனவே
பொருந்த மாரய்யன் இருந்தனனே"

என்பதாகும். அவர் இருந்த இருக்கை அரி, அயன், மாரய்யன் மூவர்க்கும் அன்றி வேறு ஒருவருக்கும் ஆகாது என்கிறார் புலவர்.

அப்பிச்சிமாரய்யன் முருகன் அவதாரமாகவே எண்ணி வழிபடப்படுகிறார். அவரது வாகனம் மயில் ; மயில் பாம்பைக் கடித்துக் குதறுகிறது : அவர் கையில் வேலாயுதம் உள்ளது ; அவர் சூரனைச் சங்காரம் செய்தார் : குன்று தோறும் குடியிருக்கின்றார் போன்ற பல செயல்கள் அப்பிச்சிமாரய்யனைப் பற்றிப் புலவர்கள் பாடிய பாடல்களில் இடம்பெறுகின்றன.

"குருமணி துலங்குமிக் கனமுடியோ ராயிரம்
குறியிடக் கூர்வாயினில்
கொத்திப் பறந்தேறு சித்திரச் செழுஞ்சரச
கோலக் கலாபமயில்மேல்"

"புரிவாக வேவந்த சித்திரவை வேலனே
பூரணா உயர்காரணா"

"சூரசங் காரனே கெம்பீரசிங் காரனே
சோர்விலா ஞானமுதலே"

"வாழ்கின்ற மூர்த்தியே குன்றுதோ றாடல்செயும்
வள்ளலே சமரவைவேல்
இகலொடு பிடித்து"

என்பன அவற்றைக் குறிக்கும் சில இலக்கியத் தொடர்களாகும். கொங்குநாட்டு வழக்கப்படி அப்பிச்சிமார் கோயிலில் உள்ள தீபத் தம்பத்தில் தண்டபாணிக் கோலத்தில் முருகன் சிற்பம் வடிக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. சிங்கநல்லூர் அப்பிச்சிமார் கோயிலிலும் தீபத்தம்பத்தில் தண்டபாணி உருவம் உள்ளது.

**இராக்கியண்ணன்**

திங்களூரில் இராக்கியண்ணன் சன்னதியும் உள்ளது. இராக்கியண்ணன் வேட்டுவரில் பட்டாலி குலத்தைச் சேர்ந்தவர். போர் புரிவதிலும், போர்க் கலைகளிலும், பிறருக்குக் கற்பிப்பதிலும் மிக வல்லவர். இராக்கியண்ணன் கீர்த்தி விருத்தப்பாடலில்

"யானைபரி தேர்கடல்போல் மிக்கபதா தியும்நிறைவ
தாகத்தோன்றி
வானகமண் ணகமெங்கும் பார்த்திடுமெய்ப் படைசூழ
வரும் ஒய்யாரா"

"மறமிகுத்து வருகின்ற மாற்றலர்கள் முடியுருள
மணித்தேர்ஏறி
விறல்மிகுந்த வேல்வாள்வில் எடுத்தமர்க ளேபுரியும்
விமலனே"

என்று கூறப்படுகின்றார்

இவ்வாறு போர் செய்யும் பெரு வீரராக இருந்தாலும் தன்னை வணங்கும் அடியவர்கட்கு அருள் செய்வதிலும் இராக்கியண்ணன் வல்லவர்.

"உனைநினைக்கும் அடியவர்கள் கேட்ட வரம் மேன்மேலும்

உறுதியாகத்

தினம்உதவ வரும்உசித ராக்கியண்ணனேசரச

தேவர்கோவே"

என்பது இராக்கியண்ணன் கீர்த்திவிருத்தப் பாடல் பகுதியாகும்.

இராக்கியண்ணன் வாழவந்திப் பிள்ளைக்கரையாற்றூரில் பெரியமாரய்யன் அவையை அலங்கரித்தவர். இவரை "ராக்கன்" என்றும் அப்பச்சிமார் காவியம் அழைக்கிறது. அப்பச்சிமார காவியத்தில் இராக்கியண்ணனை அறிமுகப்படுத்தும் பாடல்,

"இருளைக் கிழித்தசெவ் வரியென்ன

இகலார் மாசற்ப மதற்கொரு

கருடன் என்ன இரவலர்க்கோர்

கற்பகக் காவெனப் பொருள் அளிப்போன்

பொருக யம்புலிக் கொடியிலங்க

புரூரன் பெரிய மாரேந்திரன்

வருடப் பட்டாலிக் குலராக்கன்

வலிய சினச்சிங்கம் போலிருந்தான்"

என்பதாகும். இராக்கியண்ணன் திரு உருவம் வலக்கையில் வாள் ஏந்தி, இடக்கையில் கேடயம் தாங்கி, இடையில் குறுவாளுடன் போருக்குரிய வட்டுடையில் காணப்படும்.

திங்களூருக்கு வடமேற்கே 5 கிலோமீட்டர் தொலைவில் இராக்கியண்ணன் "சிறைக்கோயில்" என்று அழைக்கப்படும் கோயில் ஒன்று தோரணவாவிக் கிராமத்தைச் சேர்ந்த தொட்டிபாளையம் அருகேயுள்ளது. அது போரில் வீரமரணம் அடைந்த "சினச்சிங்கம்" என்றும் "சொன்ன மொழி தப்பாத சூரன்" என்றும் புகழப்பட்ட பட்டாலி குல இராக்கியண்ணன் சிரத்திற்கு (தலைக்கு) எடுக்கப்பட்ட பள்ளிப்படைக் கோயிலாக இருக்கலாம். "சிரக்கோயில்" சிறைக்கோயிலாக அழைக்கப்படுகிறது போலும். அப்பிச்சிமார் கோயிலில் தவறாமல் இடம்பெறும் இராக்கியண்ணனுக்குச் சில இடங்களில் தனிக்கோயிலும் உண்டு.




Scanned with OKEN Scanner

மசரியம்மன்

தாய்த் தெய்வ வழிபாட்டின் அம்சமான எல்லாப் பெண் தெய்வங்களைப் போல் மசரியம்மனும் பார்வதியின் அவதாரமாகவே கருதப்படுகிறார்.

முருகப் பெருமானையும், கணபதியையும் மகவாகப் பெற்றவர் ; கங்கையைத் தலையில் அணிந்தவர் ; சிங்க வாகனம் உடையவர் ; சிவபெருமானிடம் இடப்பாகம் பெற்றவர் என்றெல்லாம் மசரியம்மன் புகழப்படுகிறார்.

"தருவென வளர்ந்த அருள்மலை தங்கிய சண்முகனார்

குருவையும் தந்தி முகன்தனை யும்தந்த கோமளமே"

என்பன போன்ற பாடல் பகுதிகள் திங்களூரில் வாழ்ந்த காட்டு வேட்டுவர் குலத்தைச் சேர்ந்த வேலப்பன் என்பாரின் பேரனும், பழனிவேல் என்பாரின் மகனுமான புலவர் வேலப்பன் அவர்களால் பாடப்பட்ட "திங்களூர் மசரிமனோன்மணி மாலை" என்ற நூலில் வருவனவாகும்.

"திங்கள் அணிகின்ற வேணிய னார்முன் திருந்தமணி
கங்கை அணிந்திடும் கொண்டத்துக் காளி"

"தாயாய் வளர்கின்ற சங்கரி யேசிங்க வாகனத்தி"

"தேவாதி தேவரும் சித்தர் செழிக்கச் செகந்தனிலே
சேவேறு சிவனிடப் பாகமும் பெற்றிடும் சேயிழை"

பிள்ளைக்கரையாற்றூரில் பெரிய மாரய்யன் அவைக் களத்தில் மெய்க்காப்பாளர்கள் போல் விளங்கிய அரசர்மக்கள் என்று அழைக்கப்பட்ட தனுக்காமன், பாதருகார் ஆகிய இருவரும் மசரியின் மக்கள் ஆவர்.

சிவபெருமான் அருளால் தவமிருந்து இம்மக்களைப் பெற்றதாக மசரியம்மன் கூறுகிறார்.

"திங்கள் சடையோனைத் தவசுபண்ணிச்
செல்வமுறப் பெற்ற மக்கள்"

"நீண்ட பல தேயமதில் நீதியதாய் வாழ்ந்திருந்து
பூண்டதவம் செய்து பெற்ற மக்கள்"

என்பன அதைக் குறிக்கும் பாடல் தொடர்களாகும்.

வனத்தில் தவமிருக்கச் சென்ற மசரியம்மன் தன் மக்களைக் காணப்பிள்ளைக்கரையாற்றூர் வருகிறார். தேடி வந்த மசரியம்மன் "செங்கனக மயில்போல செங்கமல லட்சுமிபோல்" இருந்ததாக அப்பச்சிமார் காவிய ஆசிரியர் கூறுகிறார். பிள்ளைக்கரையாற்றூரில் தன் மக்களைக் காணாமல், ஒடப்பள்ளி வந்து திருமண வீட்டிலும் மக்களைக் காணாமல் ஆலத்தூர்ப் போர்க்களம் வந்து வீரமரணம் அடைந்த தன் இரு மக்களையும் கண்டு மசரியம்மன் புலம்பும் பகுதி உள்ளத்தை உருக்குவதாகும்.

திங்களூரில் மசரியம்மன் தன் இரு மக்களோடும் எழுந்தருளியிருப்பது சிறப்புமிக்கதாகும். கொங்கு நாட்டில் பல அம்மன் கோயில்களில் மசரியம்மனுக்குத் தனிச் சன்னதிகள் அமைக்கப்பட்டிருப்பதைக் காணலாம். முன்பு மசரியம்மனுக்குப் பலி கொடுக்கும் வழக்கம் இங்கு இருந்தது. இப்போது பலி வழக்கம் இல்லை.

**சிற்பமும், ஓவியமும்**

கொங்கு நாட்டின் சமூக நல்லிணக்கத்திற்கு எடுத்துக்காட்டாக, கொங்கு நாட்டின் பண்பாட்டுச் சின்னமாக விளங்கும் இக்கோயில் சிற்ப, ஓவியக் களஞ்சியமாகத் திகழுவது குறிப்பிடத்தக்கது.

சிறு இராஜகோபுரத்தோடு விளங்கும் முன் வாயில் மண்டபத்தில் பக்கச் சுவர்களிலும், தூண்களிலும், விதானத்திலும் சிறிதும் பெரிதுமாக மிக நுட்பமான பல சிற்பங்கள் நம் கண்களைக் கவருகின்றன. அவற்றுள் பல சைவ – வைணவத் தொடர்பானவை. தீபத் தம்ப மண்டபத்தில் உள்ள இரண்டு பெரிய யானைக் கல் சிற்பங்கள் அழகிய வேலைப்பாடு உடையவை.

இராஜகோபுர நுழைவாயில் கதவிலும், தீபத்தம்பத்தின் எதிரில் உள்ள நுழைவாயில் கதவிலும் உள்ள மரச்சிற்பங்கள் எங்கும் இல்லாத வகையில் மிக நுட்பமான வேலைப்பாடுகளோடு திகழ்கின்றன. அப்பச்சிமாரய்யன், மசரியம்மன் சன்னதி முன் மண்டபத் தூண்களிலும், விதானங்களிலும் பல சிற்பங்கள் உள்ளன. கோயிலை உருவாக்கிய திங்களூர் அப்பச்சிமார் மடம் காட்டு வேட்டுவர் குலப் பட்டக்காரர்களின் முன்னோர் சிற்பங்களும் உள்ளன. கையில் கேடயமும், வாளும் தாங்கிய போருக்குரிய வட்டுடையோடு காணப்படும் வீரர்களின் சிற்பம் மிக அழகாக வடிக்கப்பட்டுள்ளது.

மிக அரிதினும் அரிதாக அப்பச்சிமாரய்யன் கோயில் சுவரில் இராமாயண வண்ண ஓவியங்கள் வரையப்பட்டிருப்பது மிகச் சிறப்பு மிக்கதாகும். நான்கு வரிசைகளில் இராமாயணத்தின் முக்கியக் காட்சிகள் பல வண்ண ஓவியங்களாகத் தீட்டப்பட்டுள்ளன. ஓவியங்களின் கீழ் ஓவியக்காட்சி தொடர்பான

செய்திகள் எழுதியிருப்பது குறிப்பிடத்தக்கது.

இவை பாதுகாக்கப்பட வேண்டிய அரிய கலைச்சின்னம் ஆகும்.

திங்களூரைப் போலவே கீழ்க்கரை அரைய நாட்டுத் திடுமல் அப்பச்சிமாரய்யன் திருக்கோயிலும் காட்டுவேட்டுவர் குலப் பெருமக்கள் நிருவாகத்தில் உள்ளது.

**கவுண்டர்கள் இருவர்**

திங்களூர் அப்பச்சிமாரய்யன் கோயிலின் அருகில் அழகுக் கவுண்டர், புகழ்க் கவுண்டர் இருவரும் தனிச் சன்னதிகளில் வணக்கத்திற்கு உரியவராக உள்ளனர். பெயர் அமைப்பிலிருந்து அவர்கள் காட்டுவேட்டுவர் சமுதாயத்தின் முன்னோராக இருக்கலாம் என்று எண்ண வேண்டியுள்ளது. திங்களூர்க் காணியாளர்கள் ஆகிய காட்டு வேட்டுவர்க்குரிய குல தெய்வக் கோயிலாக இது விளங்குகிறது.

தி.அ. முத்துச்சாமி கோனார் அவர்கள் 1934 ல் எழுதிய "கொங்குநாடு" என்ற நூலில் திங்களூர் அப்பச்சிமார் கோயில் பற்றிக் கூறும்போது "ஈட்டிமாரன்" "நல்லாயுதமாரன்" என இரு தெய்வங்கள் இருப்பதாகக் குறிப்பிட்டுள்ளார். அவர்கள் காட்டு வேட்டுவர் என்ற குறிப்பையும் கோனார் அவர்கள் தருகிறார். இவ்விருவரும் புகழ்க்கவுண்டர், அழகுக் கவுண்டராக இருக்கலாம். இவர்களைப் புகழுடையாக்கவுண்டர்,அழகுடையாக் கவுண்டர் என்றும் அழைக்கின்றனர். இவ்வளாகத்தில் "வீரமாத்தி" தெய்வமும் வணக்கத்திற்குரிய சன்னதியாக உள்ளது. "வீரமாத்தி" காட்டு வேட்டுவர் குலப் பெண்ணாக இருக்கலாம்.குலத்தின் பெருமையைக் காக்கவோ அல்லது நல்ல நோக்கத்திற்காகவோ தன் உயிரைப் போக்கிக் கொண்ட பெண்ணாக இருக்கலாம்.

**நொண்டி நாடகத்தில் அப்பச்சிமார் மடம்**

திங்களூர் அருள்மலை முருகனைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு நொண்டி நாடகம் ஒன்றைத் திங்களூர் அவினாசிப் புலவர் இயற்றியுள்ளார். அவர் திங்களூர் செங்குந்தர் மரபினர்.

அவர் அப்பச்சிமார் மடம் சென்று திங்களூர்ப் பட்டக்காரர் ஆண்டமுத்துக் கவுண்டர் முன்பு நாடகத்தைப் பாடியும் ஆடியும் காட்டிப் பரிசு பெற்றுள்ளார். இக்குறிப்பு நொண்டி நாடகத்திலேயே உள்ளது.

"பாருலகில் ஆசுகவி நொண்டி – தன்னைப்
படித்து நடிக்கத் தியாகம்
கொடுத்தாரைச் சொல்லுகிறேன்

மாரய்யன் மடப்பதியில் சென்று – அப்பச்சி
மாரய்யனைப் போற்றியே வித்
தாரமாகப் படித்தேன்

கொற்றவன் குருகுல வீரன் – நல்ல
கோகனகம் போலே உற்ற
வாகைமாலை மார்பன்

பக்தியுள்ள சிவபூசை வேடன் – நல்ல
பார்த்திபர்கள் மெய்க்கச் சிவ
ராத்திரியுண்டு பண்ணினோன்

தின்றுருசி யானகறி தன்னைச் – சிவனே
தின்னப்பா எனக்கொடுத்த
கண்ணப்ப வங்கிசத்தான்

அன்றுலகில் புகழ்பெற்ற தூயன் – என்னை
ஆண்டமுத்து ராயனவன்
வேண்டியபொன் கொடுத்தான்"

என்பன நொண்டி நாடகப் பகுதிகளாகும்.

**கொங்கு மண்டல சதகம்**

கொங்கு மண்டல சதகப் பாடல் ஒன்று அப்பச்சிமார் கொங்குநாட்டில் புகழ்பெற்று விளங்குவதாகக் கூறுகிறது.

"படங்கொண்ட பாம்பலங் காரர்க்கு மாறாத பக்திகொண்டு
திடங்கொண்ட நெஞ்சோடு திண்கொண்ட தோள்கொண்டு கீர்த்திகொண்டு
அடங்கொண்ட பேய்நோய் விடம்தீர்த்து அருள்கின்ற அப்பச்சிமார்
மடங்கொண்டு வண்புகழ் கொண்டதன் றோகொங்கு மண்டலமே"

என்பது சதகப் பாடலாகும்.

கரூர் ஆய்வாளர் பேராசிரியர் இராசசேகர தங்கமணி அவர்கள் "அப்பச்சிமாருக்குக் கொங்கு நாட்டில் ஏழு கோயில்கள் உள்ளன. அவற்றுள் திங்களூர்க் கோயிலே முதன்மையானது ; கொங்கு நாட்டு வேட்டுவ சமுதாயப் பட்டக்காரர்களில் திங்களூர் அப்பச்சிமார் மடம் பட்டக்காரர்களே தலைமையானவர்கள்" என்று தன் நூலில் குறித்துள்ளார்.



